# ஐந்தாண்டு அபிவிருத்தி

வட ஆற்காடு ஜில்லா



479




# ஐந்தாண்டு அபிவிருத்தி

## வட ஆற்காடு ஜில்லா

RM. MUTHIAH
ARTIST
KOTTAIYUR
(RAMNAD DIST.)

ROJA MUTHIAH
47, HOSPITAL STREET
KOTTAIYUR-623 106
P. M. DIST - TAMIL NADU
INDIA

சென்னை சர்க்கார்
செய்தி இலாகாவின் வெளியீடு
1951

[விலை, அணா 4.

இந்நூலின் இறுதியில் சேர்த்துள்ள ஜில்லாப் படத்தைத் தயாரித்து, அச்சடித்துக் கொடுத்தவர், சென்னை சர்க்கார் சர்வே இலாகாவினர் ஆவர். படத்தின் அளவு மிகப் பெரியதாய் இல்லாமையால், வெகு முக்கியமான குறிப்புகளை மட்டுமே அதில் காட்ட முடிந்தது.

இந்திய சர்க்கார் புதை பொருள் ஆராய்ச்சி இலாகாவினர் (Archæological Department) புராதனக்கலைகள் சம்பந்தமான பல அழகிய படங்களை வெளியிட அனுமதி தந்துதவினர். அவற்றுள் பெரும்பாலானவற்றைக் கடைசி அட்டைப்படத்தில் காணலாம்.

ஸ்ரீ எம். கே. ரங்கசாமி அய்யங்கார் அவர்கள் அளித்த சில படங்களும் இதில் சேர்க்கப் பட்டுள்ளன.

படங்கள்

மேல் அட்டை :—

முதல் பக்கம் :

பெரியது—

வேலூர் கோட்டையும் கோயிலும்.

சிறியது—

புது முறை நீர்ப்பாசனம்.

கடைசி அட்டை :

தஞ்சாவூர் கோயில், திருச்சி மலைக்கோட்டை, உதகமண்டலக் காட்சி, கோடைக்கானல் ஏரி, ராமேஸ்வரம் கோயில் உட்புறக் கலைக் கூடம், புகலூர் பாலம், மேட்டூர் நீர்த் தேக்கம், பாபநாசம் மின்சார நிலையம், திருவரங்கம் கோயில் சிற்பம், மாமல்லபுரம் சிற்பம், குற்றால நீர்வீழ்ச்சி.



மேன்மை தங்கிய சென்னை கவர்னர்
ஸ்ரீ ஸர் கிருஷ்ணகுமார் ஸின்ஹ்ஜி பவ்ஸின்ஹ்ஜி,
கே. ஸி. எஸ். ஐ. பவ்நகர் மஹாராஜா.



கனம் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன்
சுகாதார மந்திரி



கனம் ஸ்ரீ எம். பக்தவத்ஸலம்
மராமத்து மந்திரி



கனம் ஸ்ரீ ஜே. எல். பி. ரோச் விக்டோரியா
உணவு மந்திரி



கனம் ஸ்ரீ பி. கோபால ரெட்டி
நிதி மந்திரி



கனம் ஸ்ரீ வி. பெருமாள்சாமி ரெட்டி
கைத்தொழில் மந்திரி



கனம் ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா
முதல் மந்திரி



கனம் ஸ்ரீ கே. மாதவ மேனன்
கல்வி மந்திரி



கனம் ஸ்ரீ பி. பரமேஸ்வரன்
கிராம அபிவிருத்தி மந்திரி



கனம் ஸ்ரீ ஹெச். சிதாராம ரெட்டி
ரெவின்யூ மந்திரி



கனம் ஸ்ரீ கே. சந்திர மௌலி
ஸ்தல ஸ்தாபன மந்திரி



கனம் ஸ்ரீ ஏ. பி. ஷெட்டி
விவசாய மந்திரி



கனம் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் அவர்கள் சுகாதார மந்திரி பதவியை 1951-ம் ஆண்டு செப்டெம்பர் 17உ ராஜிநாமா செய்த பிறகு கனம் ஸ்ரீ களா வெங்கடராவ் செப்டெம்பர் 26உயிலிருந்து அப்பதவியில் நியமிக்கப்பட்டிருக்கிருர்.

பொது ஜனப் பிரதிநிதிகள் சென்னை ராஜ்ய ஆட்சி முறையை மேற்கொண்டு இப்போது ஐந்தாண்டுகளுக்கு மேலாகிறது. நமது தேசத்தின் சரித்திரத்திலேயே இந்த ஐந்து வருஷ காலமும் ஒரு சோதனைக் கட்டமாகும். முற்கால ஆட்சி முறையின் சின்னங்கள், தற்கால மாறுதல்கள் காரணமாகத் தோன்றும் இன்னல்கள், வருங்கால நல்வாழ்வுக்குரிய பலமான அஸ்திவாரம் கோலவேண்டிய கடமை ஆகிய எல்லாவற்றையும், அரசாங்கம் ஏக காலத்தில் கவனிக்க வேண்டியதாயிற்று.

இத்தகைய சோதனைகளுக்கும் நிர்ப்பந்தங்களுக்குமிடையே, சர்க்கார் தங்கள் ஒரே லட்சியத்தை மறக்காமல் போற்றி வந்துள்ளனர். அதாவது, " எம் கடன் மக்களுக்குப் பணிசெய்து கிடப்பதே " என்னும் உயர்ந்த கொள்கையை அவர்கள் கடைப்பிடித்து வருகிருர்கள். மக்களுடைய நன்மையைக் கோரியும், அவர்களுடைய கட்டளையை நிறைவேற்றவுந்தான், ஜனப் பிரதிநிதிகள் அரசாங்கப் பதவியை வகித்து வருகின்றனர்.

எத்தனையோ காலமாக நாம் கண்டு கொண்டிருந்த இலட்சியக் கனவுகள், கடந்த ஐந்தாண்டுகளில் நனவாகி இருக்கின்றன. மதுவிலக்கு, ஜமீன்முறை நீக்கம், நீதி-நிர்வாகப் பிரிவினை ஆகிய சீர்திருத்தங்கள், நம்முடைய எதிர்கால சந்ததியாருக்கு மிகச் சிறந்த நற்பயன் அளிப்பதோடு, சமூக அமைப்பிலேயே ஒரு புரட்சியை உண்டாக்கும் என்பதில் சந்தேகமில்லை.

மூல சாதனக் குறைவினுல் ஏற்பட்ட முடக்கம், மற்றும் எத்தனையோ பெரிய சங்கடங்களுக்கும் இடையே, அநேக அபிவிருத்தித் திட்டங்கள் வெற்றிகரமாக நிறைவேறியுள்ளன. இத்திட்டங்கள் கஷ்டமான உணவு நிலைமையை ஓரளவு சமாளிக்க உதவுவதோடு, பொதுவாகப் பொருளாதாரத் துறையில் ஸ்திரமான நிலையையும் முன்னேற்றத்தையும் ஏற்படுத்தக் காரணமாயிருக்கின்றன.

பிரிட்டிஷார் தங்கள் ஆட்சிக் காலம் பூராவும் நீர்ப்பாசனத்துக்காகச் செலவு செய்த தொகைக்கு மேலேயே, நாம் கடந்த ஐந்தாண்டுகளில், அதன் பொருட்டு இந்த ராஜ்யத்தில் செலவிட்டிருக்கிறோம். 1945–46-ம் ஆண்டில் ஒரு கோடி ரூபாய்க்கும் குறைவாக இருந்த நீர்ப்பாசனச் செலவு, 1951–52-ம் வருஷத்தில், சர்க்காரின் வரவு செலவுத் திட்ட மதிப்பின்படி, 10 கோடி ரூபாய்க்கு மேலாகியுள்ளது. இப்போது நமது ராஜ்யத்தில் மொத்தம் 101 லட்சம் ஏக்கரா நிலங்களுக்குப் பாசன வசதி கிடைக்கிறது.

தவிர, நமது சென்னை ராஜ்யத்தில் மின்சார உற்பத்தி இரு மடங்கு அதிகமாகியுள்ளது. மின்சார அபிவிருத்திக்கான ஐந்து வருஷத் திட்டத்தில் மூன்றில் இரு பங்கு பூர்த்தியாகி விட்டது. இதன் மூலம் சுமார் 1,600 கிராமங்களுக்கு மின்சாரம் சப்ளையாகிறது. கிராமங்களுக்கு மின்சார வசதி செய்துகொடுப்பதில் இந்தியா முழுவதிலும் சென்னை ராஜ்யமே முதன்மை ஸ்தானம் வகிக்கிறது. 1945–46-ம் வருஷத்தில் மின்சாரத் துறையில் அரை கோடி ரூபாய்க்குக் கொஞ்சம் அதிகமாக மட்டும் சென்னை அரசாங்கத்தார் செலவிட்டனர். ஆனால், 1951–52-ம் ஆண்டிலோ, பட்ஜெட் மதிப்பின் பிரகாரம், ஒன்பது கோடி ரூபாய்க்குமேல் செலவிடத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. எனவே, ஐந்தாண்டுகளில், நீர்ப்பாசனத் துறையில் ஏறக்குறைய பத்து மடங்கும், மின்சாரத் துறையில் இருபது மடங்கும், அபிவிருத்தி ஏற்பட்டுள்ளது விளங்கும்.

இத்தனை சாதனைகளுக்கும் பொது ஜனங்களின் பூரண ஒத்துழைப்பே காரணமாயிருந்தது. சர்க்காருடன் மக்கள் மனமுவந்து ஒத்துழைத்ததால்தான், அநேக காரியங்களை நிறைவேற்றுவது சாத்தியமாயிற்று. ஆகவே, இவற்றை எல்லாம் சாதித்த பெருமை, நிச்சயமாக இந்த ராஜ்ய மக்களையே சார்ந்ததாகும். அதாவது, பொது ஜனங்களாகிய உங்களுக்கே அப்பெருமை உரியதாகும்.

கடந்த ஐந்தாண்டுகளில் ஒவ்வொரு ஜில்லாவிலும் ஏற்பட்ட க்ஷேமாபிவிருத்திகளை விளக்கும் வெளியீடுகளில், இப்புத்தகம் ஒன்றாகும். உங்கள் சர்க்கார் என்னென்ன செய்தார்கள் என்பதை இதன் மூலம் உங்களுக்குச் சமர்ப்பிக்கிறோம். இதை அறிந்து கொள்ளவேண்டிய உரிமையும், இதுபற்றித் தீர்ப்பளிக்கும் பொறுப்பும் உங்களுக்கே உண்டு.

பி. எஸ். குமாரசாமி ராஜா

# அறிமுகம்

பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்
நற்றவ வானினும் நனி சிறந்தனவே.

நம் மிந்திய நாட்டின் இயற்கைக் காட்சிகளையும் இந்திய சிற்பிகளின் தொழில் நுட்பங்களையும் கண்டு களிக்க வெளி நாடுகளிலிருந்து வரும் யாத்திரிகர்கள் வேலூர் நகரிலுள்ள கோட்டையையும் அக் கோட்டையுள் அமைந்திருக்கும் கோயிலையும் பார்வை யிடாமல் தங்கள் நாடுகளுக்குத் திரும்புவதில்லை. அந்த யாத்திரிகர்களில் ஒரு சிலர் அவற்றைப்பற்றி எழுதியுள்ள குறிப்புக்களில் தங்கள் வியப்பையும் தெரிவித்துள்ளார்கள்.

வடஆற்காடு ஜில்லாவின் தலைநகர் ராயவேலூர் எனவழங்கும் வேலூர் நாற்புறமும் குன்றுகள் சூழ்ந்த தோர் அழகியநகரம். அது பாலாற்றங்கரைக்குத் தெற்கில் சுமார் ஒருமைல் தூரத்தில் உள்ளது. அந் நகரத்தின் உள்ளும் புறமும் கொடி முந்திரி, ஆரஞ்சு முதலிய பழத் தோட்டங்களும், தென்னை, மா, பலா முதலிய மரத் தோப்புகளும் கண் கவரும் வனப்பு வாய்ந்து விளங்குகின்றன. அந் நகரில் ஆங்காங்குள்ள பூங்கா வனங்களில்

மலரும் மலர்களின் நறு மணம் காற்றில் மிதந்து நகர மெங்கும் பரவி நிற்கும்.

அந்நகருள் நுழைவோரின் உள்ளத்தைக் கவர்ந்து உவப்பு அளிப்பது அந்நகரின் நடுவில் வெளியிடத்தில் தனித்து ஓங்கி வானளாவி நிற்கும் கோயில் கோபுரத் துடன் கூடிய கோட்டையாகும். போர்புரியுங் காலங் களில் பகைவரை வெற்றியடையாவண்ணம் தடுத்துத் துரத்தியடிப்பதற்குத் தகுதியான அங்கங்கள் யாவும் பொருந்தி விளங்கும் கட்டிடத்திற்கு, தென்னிந்தியாவில் இக் கோட்டையே சிறந்த உதாரணமாகும். இக் கோட் டையின் வெளிப்புறச் சுவர்கள் யாவும் சுண்ணக் கூட் டின்றி ஒன்றோடொன்று ஒழுங்காகப் பொருந்திய கருங் கற்களால் எழுப்பப் பெற்றுள்ளன.

இக்கோட்டையின் வடகிழக்குப் பாகத்தில் நிருமிக்கப் பெற்றுள்ள கோயிலின் சிற்ப வேலைப்பாடுகளை நோக்கும் போது, மதுரையைக் காட்டிலும் இது மேன்மை யுற்று விளங்குகிறதென்று சில யாத்திரிகர்கள் அபிப்பிராயப் படு கிறார்கள். இக் கோயிலும் கோட்டையும், குடியாத்தம் தாலூகாவிலுள்ள மலையன்பட்டி தேவாலய சிலாசாசன மொன்றில் கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதி யில் நிருமிக்கப்பட்டன வென்று குறிக்கப்பெற்றுள்ளது. அக்கோயிலின் வாயிலில் அமைந்த கோபுரம் சித்திர வேலைப்பாடுகள் பொருந்தி விளங்குகிறது. அதில் சித்திரிக் கப்பெற்ற உருவச் சிலைகளுள் அக் கோட்டையை நிருமித்த பொம்மி ரெட்டியின் உருவச்சிலை கம்பீரத் தோற்ற மளித்து நிற்கிறது.

அக் கோயிலைச் சேர்ந்த கலியாண மண்டபம் அக் காலத் துச் சிற்பிகளின் கலாசாரப் பண்பாட்டையும், கை வன் மையையும் நன்கு தெரிவிக்கின்றது. ஒற்றைக் கற்களில் செதுக்கிய அழகிய உருவச் சிலைகள் நமது கண்களைக் கவர் கின்றன. அக்கலியாண மண்டபத்தைச் சுற்றியுள்ள தூண்களில் குதிரை வீரர்களின் சிலைகள் உன்னத சிற்ப வேலைப்பாடுகளுடன் விளங்குகின்றன.

தலை கீழாகத் தொங்கியவண்ணம் தாமரைப் பூவின் மலர்ந்த இதழ்களை அலகுகளிலும் கூரிய நகங்களிலும் சில கிளிகள் பற்றிக்கொண்டிருப்பதாக அக்கலியாண மண்டபத்தின் கூரையில் ஒரே கல்லில் செதுக்கப்பட்டுள்ள சித்திரங்கள் பெரிதும் வியக்கத்தகுவனவாம்.

கலியாண மண்டபத்தின் சித்திர வேலைப்பாடுகளைப் போல் அக் கோயிலின் இதர இடங்களில் காண்பதற்கில்லை. கோயிலின் வடமேற்கு மூலையில் கிணறு ஒன்று உண்டு. அதை விஜயநகரத்து மன்னர் கிருஷ்ண தேவராயர் கட்டி முடித்ததாகக் கூறுகிருர்கள். அக் கிணற்றின் அடிப்புறத்திலுள்ள கல் மண்டபத்தில் அக் கோயிலுக்குச் சொந்தமான நகைகள் யாவும் மறைத்து வைக்கப்பட்டுள்ளன வென்று அவ்வூரார் சொல்லிக் கொள்ளுகிருர்கள்.

அக் கோயிலின் மூலஸ்தானத்தில் சில படிகள் காணப்படுகின்றன. அவற்றின் மூலம் கீழே இறங்கிச் சென்று அப்பாதாள வழி எங்கு முடிவடைகிறது என்பதைத் தெரிந்து கொள்ள எவரும் இதுகாறும் துணியவில்லை. ஆனல், அவ்வழி வேலூருக்கு மேற்கில் 8 மைல் தூரத்தில் உள்ள விரிஞ்சிபுர சிவாலயத்துக்குச் செல்கிற தென்று பலர் நம்புகிருர்கள்.

இக் கோயிலின் கலியாண மண்டபத்தை அப்படியே தோண்டி எடுத்துக்கொண்டு போய் இங்கிலாந்தில் பிரைட்டன் என்னும் இடத்தில் வைக்க, சுமார் 100 வருஷங்களுக்கு முன் கிழக் கிந்திய வர்த்தகக் கம்பெனியார் பெரு முயற்சி செய்தார்கள். ஆனல் நம் நாட்டின் அதிர்ஷ்ட வசமாக, அம்மண்டபத்தைப் பெயர்த்துக் கொண்டுபோக ஏற்பாடு செய்திருந்த புகைக் கப்பல் இந்தியாவுக்கு வரும் வழியில் கடலில் மூழ்கி விட்டது. அது காரணம் பற்றி கம்பெனியாரின் முயற்சி வீணுயிற்று; கலியாண மண்டபமும் நமது நாட்டை விட்டு வெளியேறவில்லை.

முன்னொரு காலத்தில், விஜயநகர மன்னருக்கும், மகம்மதிய நவாபுகளுக்கும், மராட்டியத் தலைவருக்கும், கடைசியில் ஆங்கிலப் போர்வீரர்களுக்கும் அபயம் அளித்துக்

காப்பாற்றிய இக் கோட்டையுள் தற்போது மாகாண போலீஸ் பயிற்சிப் பாடசாலையும், கச்சேரிகளும், மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டுகளும், சர்க்கார் காரியாலயங்களும் அலுவல் நடத்தி வருகின்றன. ஆனால் அக் கோட்டையுள் அமைக்கப்பட்டுள்ள கோயில் ஒருபுறம் தனித்து நிற்கிறது. அக் கோயிலின் கோபுரம், ஒரு மௌன பக்தன் தன் கைகளைப் பரக்க விரித்துக் கடவுளை நோக்கிக் குறையிரந்து நிற்பது போல், வானுற ஓங்கி நிற்கிறது. அக் கோயிலில் பக்தர்களின் கூட்டமில்லை; மக்களை வழிபாட்டுக்கு அழைக்கும் மணிகளின் ஓசை கேட்பதில்லை ; கற்பூரப் புகைப் படலங்கள் அக் கோயிலினின்றும் எழுவதில்லை. ஏகாந்தமாய் இருக்கும் அக் கோயிலுள் அமைதியே நிலைத்து நிற்கிறது.

சரித்திர பிரசித்தி பெற்ற இந்த ஜில்லாவிலுள்ள ராணிப்பேட்டையைக் காணுங்கால், நமக்கு தேசிங்கு மன்னன், அவன் மனைவி ஆகியோரின் ஞாபகம் வருகிறது. செஞ்சிக் கோட்டையின் சிதைவுகளும் நமது மனக்கண் முன் தோன்றி மறைகின்றன. போரில் புறங்கொடாமல் பொருது மாண்ட வீரசிகாமணியாகிய தேசிங்கு மன்னனின் விழுப்புண்பட்ட சவத்தைக் கண்டதும் அவன் மனைவி உடன்கட்டையேறி மரித்தாள். அவளுடைய ஒப்புயர்வற்ற தியாகத்தைக்கண்டு வியப்பும், திகைப்பும் கொண்ட, தேசிங்கு மன்னனின் மகம்மதிய பகையரசன் சாதத்துல்லாகான், அவ்வுத்தம மனைவியின் ஞாபகார்த்தமாக கி.பி. பதினெட்டாம்நூற்றுண்டின் கடைப்பகுதியில் ராணிப்பேட்டை என்னும் இந்நகரை நிருமித்தான். அவன் அந்த யுவ ராணியின் மீது கொண்ட மதிப்புக்கு அந் நகர் ஓர் அறிகுறியாக நின்று நிலவுகிறது. ராணிப்பேட்டைக்குக் கிழக்கில், சுமார் ஒரு மைல் தூரத்தில் பாலாற்றங்கரையோரமாய் மூன்று மைல் பரப்பு வாய்ந்த அழகிய தோப்பு ஒன்றுண்டு. அத்தோப்பில் சுமார் ஒன்பது லட்சம் மாமரங்களும், ஆரஞ்சு செடிகளும், தென்னை மரங்களும், இதர பழச்செடிகளும் பயிராகி வரு

வதால் அதற்கு "நவ்லக்பாக்" (Naulakh Bagh) என்னும் பெயர் வழங்கிவருகிறது.

திருவண்ணுமலை ஒரு சிறந்தவியாபார ஸ்தலம். இங்கிருந்து பலபக்கங்களுக்கும் சாலைகள் போகின்றன. செங்கம் கணவாய் இம்மலையிலிருந்துதான் சேலம் வரையில் நீடிக்கிறது. திருவண்ணுமலையின் அடிவாரத்தில் மிகப் பிரசித்தி பெற்ற ஒரு புராதன சிவாலயம் உண்டு. இங்கு வருஷந்தோறும் கார்த்திகை மாதத்தில் தீபஉற்சவம் நடைபெறுகிறது. பல திசைகளிலிருந்தும் பக்தர்கள் அங்குக்கூடி தீபதரிசனம் செய்து மகிழ்ச்சி எய்துகிறார்கள். வருஷந்தோறும் தீபவிழாவின்போது அங்கு மாட்டுச் சந்தைகள் கூடும்.

சோளிங்கபுரம்.—சோழலிங்கபுரம் என்பது சோளிங்கபுரம் என மருவியுள்ளது. இந்த ஸ்தலத்தில் சோழலிங்கேஸ்வரர் ஆலயமிருப்பதால் இதற்கு இப்பெயர் வழங்கலாயிற்று. இந்த ஸ்தலம் சோளிங்கபுரம் என்னும் புகைவண்டி நிலையத்திலிருந்து 7 மைல் தூரத்தில் இருக்கிறது. இவ்வூர் மிகவும் விஸ்தாரமானது. நெசவாளர்களும் வாணிபர்களும் இங்குப் பெருவாரியாய்க் குடியிருந்து வருகின்றனர். இங்கு வியாபாரம் வெகு செம்மையாக நடந்தேறி வருகிறது. இங்கு வாரந்தோறும் சந்தை கூடுகிறது.

இந்த ஸ்தலத்தில் இரு மலைகள் உண்டு. ஒன்றுக்குப் பெரிய மலையென்றும் மற்றொன்றுக்குச் சின்னமலை என்றும் பெயர். குளிர்ச்சியும், காற்று வசதியும் பொருந்தியுள்ள பெரிய மலையின் உச்சியில் நரசிம்ம சுவாமியின் ஆலயம் இருக்கின்றது. மலைமீது ஏறிச் செல்வதற்குப் படிகள் வெட்டப்பட்டுள்ளன. சின்னமலையில் ஆஞ்சநேய சுவாமியின் ஆலயம் உண்டு. இது மிகவும் கீர்த்தி வாய்ந்தது.

இந்த ஸ்தலத்தில் அநேக புண்ணிய தீர்த்தங்கள் உண்டு. அவற்றுள் பிரம்ம தீர்த்தமும், அநுமந்த தீர்த்தமும் முக்கியமானவை.

# நிலவளம்

*விவசாயம், கால்நடைகள் ஆகியவற்றின் அபிவிருத்தியை நவீன விஞ்ஞான முறையில் அமைத்திட அரசாங்கம் முயலும்.*

—இந்திய அரசியல் அமைப்புச் சட்டம்.
ஷரத்து—48

உணவுத் தானிய உற்பத்தி விஷயத்தில் வட ஆற்காடு ஜில்லா பற்றாக்குறைப் பிரதேசமாகும். இந்த ஜில்லாவில் வேளாண்மை பெரும்பாலும் இங்குப் பெய்யும் மழையைப் பொறுத்திருக்கிறது. வருஷந்தோறும் இந்த ஜில்லாவில் சராசரி 40 அங்குல மழை பெய்கிறதென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

இந்த ஜில்லாவின் முக்கிய நதிகள் பாலாறு, செய்யாறு என்பவையாம். பொன்னியாறு, கோட்டாறு, கௌண்டின்ய நதி ஆகிய இம் மூன்றும் பாலாற்றின் உப-நதிகள். கோட்டாறும், கௌண்டின்ய நதியும் குடியாத்தம் தாலூகாவுட் புகுந்துஅப்பால் பாலாற்றோடு வந்து கலக்கின்றன.

இவையல்லாமல் இந்த ஜில்லாவில் குசஸ் தலையாறு (குட்டதலையாறு) வாலாஜாபேட்டை தாலூகாவிலே

பாலாற்றுக்கருகில் உற்பத்தியாகிறது.

## ஓடு கால்வாய்கள்

பெரும்பாலும் இந் நதிகள் யாவற்றிலும் வருஷ முழுவதும் ஜலம் ஓடுவதில்லை. மழைக் காலங்களில் இந்த ஆறுகளில் வெள்ளம் ஏற்படுகிறது. வெள்ளம் அந் நதிகளில் அதிகமாயிருந்தாலும் ஜலம் வெகு விரைவில் வற்றிப்போகும். நதிகளில் ஜலம் வற்றிய பிறகு ஓடுகால்கள் வெட்டுவார்கள். அக்கால்களில்ஓடும் ஜலத்தைச் சிறு சிறு கால்வாய்கள் மூலம் கொண்டுபோய் ஆங்காங்குள்ள குளங்களிலும் ஏரிகளிலும் நிரப்புவார்கள்.

சென்ற நான்கு வருஷ காலமாக இந்த ஜில்லாவிலும் பருவ மழை பொய்த்து விட்டது. அதனால் நமது ஜனநாயக சர்க்கார் மக்களிடையே உணவுப் பஞ்சம் ஏற்படுவதைத் தடுக்க, முதன் முதலாக நாட்டில் கிடைக்கக்கூடிய உணவுத் தானியங்களை ஒழுங்கான முறையில், நியாய விலைக்கு, மக்களுக்குச் சமமாக விநியோகிக்க பங்கீடு, கட்டுப்பாடு என்னும் முறைகளைக் கையாண்டனர். ஈரமில்லாத நெஞ்சமுடைய வர்த்தகர்கள் சுய நலப்பற்றுடன் உணவுத் தானியங்களைப் பதுக்குவதும், அவற்றைக் கொள்ளை லாபத்துக்கு விற்பதும் தடுக்கப்பட்டன.

## கிராமப் பங்கீட்டு முறை நீக்கம்

ஆயினும், மக்கள் பங்கீடு, கட்டுப்பாடு முறைகளைப் பெரிதும் வெறுத்தனர். மக்களின் வெறுப்புணர்ச்சியைக் கவனித்த இந்திய சர்க்கார் 1947-ம் ௵ டிசம்பர் ௴ முடிவில் கிராமப் பங்கீட்டு முறையை நீக்கினர். 1948-ம் ௵ மார்ச்சு மாதத்தில் முனிசிபல் நகரங்களில் பங்கீட்டு முறை நிறுத்தி விடப்பட்டது. அதனால் உணவுத் தானியங்களின் விலை அபரிமிதமாக உயர்ந்தது. அநேக மக்களுக்கு நியாய விலைக்கு உணவுத் தானியங்கள் கிடைப்பது அரிதாய் விட்டது. இந்த ஜில்லாவில் ஆங்காங்கு சர்க்கார் நிவாரணக் கடைகள் திறந்து வைத்து மக்களுக்கு உணவுத் தானியங்கள்

விநியோகித்து வந்தனர்.

ஆகையால் 1948-ம் ஆண்டு முடிவில் உணவுப் பங்கீட்டு முறை கிராமங்களிலும் 1949-ம்வரு மார்ச்சு மாதந் தொடங்கி முனிசிபல் நகரங்களிலும் புகுத்தப்பட்டது. சென்னை ராஜ்யத்தைச் சேர்ந்த எல்லா ஜில்லாக்களுக்கும் வட ஆற்காடு ஜில்லா உள்பட 1950-ம்வரு ஒரு பெருஞ் சோதனை வருஷம். இந்த ஆண்டில் உணவுத் தானியங்கள் போதுமான அளவுக்குக் கிடைக்கவில்லை. மூன்றுவது முறையாக 1950-ஆம் ஆண்டிலும் இந்த ஜில்லாவில் பருவ மழை தவறியது. ஆனபோதிலும், சர்க்கார் இந்த ஜில்லா மக்களுக்கு உணவளிக்கப் பெரு முயற்சி எடுத்துக்கொண்டார்கள். சர்க்கார் கையாண்டு வந்த கொள்முதல் முறையை இந்த ஜில்லாவின் மக்கள் வெறுத்தார்கள். அவர்கள் விருப்பத்துக்கிணங்கி சர்க்கார் கிராமப் பிரதேசங்களில் கொள்முதல்,பங்கீட்டு முறைகளை நீக்கி விட்டார்கள்.

உணவுத் தானியங்கள் வீணுவதைத் தடுக்க கலியாண முதலிய விசேஷ காலங்களில் பலர் பந்தி போஜனம் அருந்தலாகாதென்று சர்க்கார் உத்திரவிட்டிருக்கிறுர்கள். இவ்வுத்திரவால் உணவு நெருக்கடி ஒருவாறு தவிர்க்கப்பட்டது.

இந்த ஜில்லாவில் 2,100 கிராமங்கள் கொண்ட 11 தாலூகாக்கள் இருக்கின்றன. இதன் மொத்த விஸ்தீர்ணம் 4,648 சதுர மைல். இங்கு 2,974,637 ஏக்கர் நிலங்கள் இருக்கின்றன. இங்குள்ள காடுகளின் விஸ்தீர்ணம் 768,182 ஏக்கர்; 349,217 ஏக்கர் நிலங்கள் தரிசாக இருக்கின்றன. 1,076,006 ஏக்கர் பூமியில் சாகுபடி நடக்கிறது.

## நீர்ப்பாசன முறைகள்

இந்த ஜில்லாவில் நிச்சய ஜல வசதிக்கான திட்டங்கள் ஒன்றும் வகுக்கப்படவில்லை. ஜீவ நதிகளென மதிக்கத்தகாத பாலாறு, செய்யாறு, பொன்னியாறு முதலிய நதிகளில் மழைக் காலங்களில் வெள்ளம் புரண்டு ஓடுகையில் அவ்வெள்ள நீரில் அங்குள்ள ஏரிகளும் குளங்களும் நிரம்பு

கின்றன. இந்த ஜில்லாவில் இருக்கும் கிணறுகளிலிருந்து ஏற்றங்கள் மூலம் நிலங்கள் நீர்ப்பாசனம் பெறுகின்றன. இங்குப் பல்வேறிடங்களில் 2,709 குளங்களும், 150,000 கிணறுகளும் இருக்கின்றன.

ஆயினும், இந்த ஜில்லாவில் உணவு உற்பத்திப் பெருக்கத்துக்கான முயற்சிகளைச் சர்க்கார் கையாண்டு வருகின்றனர். யந்திர சாதனங்களைக்கொண்டு தரிசு நிலங்கள் சாகுபடிக்கு லாயக்காகப் பண்படுத்தப்பட்டுள்ளன. கடந்த நான்கு வருஷ காலத்தில் 2,842 ஏக்கர் பூமி நன்ருக உழுது பயிரிடப்பட்டது. 240 ஏக்கர் நிலங்கள் சமப்படுத்தப்பட்டன. இவ்வகையால், எதிர்பார்த்தபடி 770 டன் உணவுத் தானியங்கள் அதிகமாகக்கிடைத்தன.

எண்ணெய் யந்திரங்களாலும், மின்சார மோட்டார்களாலும் இயக்கப்பட்ட பம்ப் செட்டுகளின் மூலம் நீர் இறைத்து வந்ததால் பருவ கால மழை தவறியும் பயிர்களுக்கு ஏற்படக்கூடிய நஷ்டம் இல்லாது போயிற்று. இந்த ஜில்லா விவசாயிகள் இத் திட்டத்தைப் பெரிதும் வியப்புடன் ஏற்றுக்கொண்டு பம்ப் செட்டுகளை உபயோகிக்கலானுர்கள்.



கிணற்று வேலைகளுக்கும் நீர்ப்பாசனத்துக்கும் பம்ப் செட்டுகள் விநியோகிக்கப்பட்டன. இந்தஜில்லாவில் விவசாய இலாகாவினர் நேரடியாக 5 ட்ராக்டர்கள், 3 புல்டோசர்கள், 16 எண்ணெய் யந்திர சாதனங்கள், 36 பெட்ரோல் பம்ப் செட்டுகள் உபயோகித்து வருகிருர்கள். விவசாயிகளுக்கு 13 பம்ப் செட்டுகள் விக்கிரயஞ் செய்யப்பட்டன.

பிரசாரத்தின் மூலமாகவும், செய்து காட்டுவதன் மூல மாகவும் விவசாய இலாகாவினர் பயிர் அபிவிருத்திக்கான முறைகளை விவசாயிகளுக்குப் பரிச்சயம் செய்து வைக்கிறார் கள். எரு தயாரித்தல், உயர்ந்த ரக வித்துக்களை உற்பத்தி செய்தல், விதை விதைத்தல், பயிர்களைப் பாதுகாத்தல், நீர் இறைத்தல், அறுவடை செய்தல், அறுவடையான நெல்லைச் சேமித்து வைத்தல் முதலிய முறைகளைக் குறித்து விவசாயி கள் அறிவுறுத்தப்படுகின்றனர்.

### உயர்ந்தரக விதைகளும் நாற்றுக்களும்

நன்செய்ப் பயிர், தோட்டப் பயிர் சம்பந்தமாய் கூப்பர் 25, கூப்பர் 11 (Cooper 25 and Cooper 11) என்னும் இரும்பு ஏர்களைக்கொண்டு உழுவதன் அவசியம் வற்புறுத்தப் பட்டது. பலவித நவீன யந்திர சாதனங்களைக் கொண்டு 5,040 தடவைகளில் விவசாயிகளின் நிலங்களில் சாகுபடி செய்யும் முறைகள் செய்து காட்டப்பட்டன. வட ஆற் காடு ஜில்லாவில் நான்கு வருஷ காலமாக அவ்வப்போது கூடிய 5,400 கூட்டங்களில் உணவு உற்பத்திப் பெருக்கத் துக்கு எரு வகைகள் எவ்வளவு அத்தியாவசியமானவை என்பது விவசாயிகளுக்கு நன்கு விளக்கிக் கூறப்பட்டது. பசுந்தழை எரு, உணவு உற்பத்திப் பெருக்கத்துக்கு முக்கியம் என்பதை விவசாயிகள் நன்கு தெரிந்து கொண் டிருக்கிறார்கள். பசுந் தழை எரு அளிக்கக்கூடிய செடி களின் 581,850 விதைகளும், 798,590 நாற்றுக்களும், கொளிஞ்சி, சூரியகாந்தி, அவுரி, அகத்தி முதலிய செடி களின் விதைகள் 76 டன்னும் விவசாயிகளுக்கு வினியோ கிக்கப்பட்டன.

### எரு வினியோகம்

இந்த ஜில்லாவில் குப்பை எரு உற்பத்தி ஆரம்பித்து வைத்து 516 இடங்களில் 2,683 டன் எடை குப்பை எரு உற்பத்தி செய்யப்பட்டது. குப்பை எரு உற்பத்தி யில் உற்சாகமளிக்க விவசாயிகளுக்குச் சர்க்கார் ரூ. 999,

மான்யமாக வழங்கியுள்ளனர்.

விவசாய இலாகாவினரின் வற்புறுத்தலின் காரணமாகவும், பிரசாரத்தின் மூலமாகவும் முனிசிபாலிட்டியாரும் பெரிய பஞ்சாயத்துக்களும் மக்கள் மலத்தினின்று குப்பை எரு உற்பத்தி செய்வதை மேற்கொண்டுள்ளார்கள். மக்களின் மலத்தை எருவாக உபயோகிப்பதில் ஏற்பட்டிருந்த அருவருப்பு கொஞ்சங் கொஞ்சமாக நீங்கி வருகிறது. எருக்களின் பாதுகாப்புக்காகப் பல்லாயிரங் குழிகள் ஆங்காங்கு வெட்டப்பட்டுள்ளன. சமீப காலம் வரையில் விவசாய இலாகாவினர் இந்த ஜில்லா விவசாயிகளுக்கு 6,496 டன் அம்மோனியம் சல்பேட்டும், 549 டன் பாஸ்பாட்டிக் எருவும், 99 டன் எலும்புத்தூளும் பயிர்களுக்கு எருவாக உபயோகிக்கும் பொருட்டு விவசாயிகளுக்கு விற்றுள்ளார்கள்.

எருக்களும், விதைகளும் வாங்கி உபயோகிக்க ரூ. 357,325-ம், விவசாயக் கருவிகள் வாங்கிப் பலனடைய ரூ. 1,070-ம் தக்காவிக் கடனாக நமது ஜனநாயக சர்க்கார் இந்த ஜில்லா விவசாயிகளுக்கு வழங்கியுள்ளனர்.

உணவுத் தானியங்கள், பருப்பு வகைகள், எண்ணெய் வித்துக்கள் ஆகியவற்றில் உயர்ந்த ரக வித்துக்கள் ஆராய்ச்சி நிலையங்களிலிருந்து வரவழைக்கப்பட்டன. 8,300 ஏக்கர் பரப்பு வாய்ந்த நெல் விதைப் பண்ணைகளும், 1,080 ஏக்கர் பரப்பு வாய்ந்த சோள விதைப் பண்ணைகளும், நிறுவி அவற்றில் அவ்விதைகளைச் சர்க்கார் விருத்தி செய்தனர். அதன் பயனாக 1,250 டன் உயர்ந்த ரக நெல் வித்துக்களும், 160 டன் உயர்ந்த ரக சோள வித்துக்களும் கிடைத்தன. பிரத்தியேக விதை அபிவிருத்திப் பகுதி யொன்று இந்த ஜில்லாவில் பணியாற்றி வருகிறது.

உணவு தானியப் பயிர்கள் பூச்சிக்களாலும் நோயாலும் அழிந்து போவதாய் இருந்தால் உணவு உற்பத்திப் பெருக்கத்துக்காக நாம் எடுத்துக்கொள்ளும் முயற்சி பயனற்றுப் போகும். அதனால் சென்ற இரண்டு வருஷங்களாக இந்த ஜில்லாவில் பூச்சிகளைக் கொல்வதற்கும்

நோய்களை அகற்றுவதற்கும் சில தொழில் நுணுக்க நிபுணர் நியமிக்கப்பட்டுப் பணியாற்றி வருகின்றனர். பூச்சிக் கொல்லி மருந்துகள் ஏராளமாய்ச் சேமித்து வைக்கப் பட்டுள்ளன. அம் மருந்துகள் உணவுத் தானிய உற்பத்தி யாளருக்குப் பாதி விலைக்கு விற்கப்படுகின்றன. மருந்துகள் தெளிப்பதற்கான கருவிகளும், பூச்சிகளையும் தூசுக்களையும் அகற்றும் கருவிகளும் உபயோகத்துக்குத் தயாராக இருக்கின்றன. ஸிங்க் பாஸ்பைட் (Zinc Phosphide) என்னும் மருந்தை உபயோகிப்பதன் மூலம் எலி களால் பயிர்களுக்கு நாசம் ஏற்படுவது தடுக்கப்பட்டு வரு கிறது.

### காய்கறிகளும், கனிவகைகளும்

உணவு போதாக் குறையை நிவர்த்திக்க இந்த ஜில்லா வில் காய் கறிகளும், சீனிக் கிழங்கு, மர வள்ளிக் கிழங்கு முதலிய குறுகிய காலப் பயிரான கிழங்கு வகைகளும் வெற்றிகரமாகப் பயிரிடப்பட்டு வருகின்றன.

காய்கறி உற்பத்தியைப் பெருக்க இந்த ஜில்லாவி லுள்ள பள்ளிக்கூடங்களுக்கும், பொது ஸ்தாபனங்களுக் கும் 61 பவுண்டு எடையுள்ள சிறந்த காய்கறி விதைகள் இலவசமாக வழங்கப்பட்டன; அதுவுமல்லாமல், 1,615 ஏக்கர் நிலங்களில் பயிரிட சீனிக் கிழங்கு, கொடி முந்திரி, மரவள்ளிக் கிழங்கு முதலிய செடிகளின் கிளைகள் விநி யோகிக்கப்பட்டன.

இந்த ஜில்லாவில் உயர்ந்த ரகப் பழ வர்க்கங்களை உற்பத்தி செய்வதற்காக அநேக சிறந்த பழச் செடிகள் நட்டுப் பயிரிடப்பட்டு வருகின்றன. இது வரையில் 2,982 மாஞ் செடிகளும், 1,733 ஆரஞ்சி செடிகளும், 1,380 அன்னாசி பழச் செடிகளும், 22,666 முந்திரிக் கொடிகளும் பயிராகியுள்ளன. இத்தகைய பழத் தோட்டங்களை நன்கு பாதுகாப்பதற்கான வழி வகைகள் விவசாயிகளுக் குப் போதிக்கப்படுகின்றன.

இந்த ஜில்லாவில் வர்த்தகப் பயிர்களில் கரும்புப் பயிர்

முக்கியத்துவம் வாய்ந்து விளங்குகிறது. விவசாய இலாகாவினரின் இடைவிடாத முயற்சியால் உயர்ந்த ரகக் கரும்பு (C.O. 419) இங்குப் பயிரிடப்படுகிறது. புதிய ரகக் கரும்பு அபிவிருத்திக்கான முறைகள் கையாளப்பட்டு வருகின்றன. கரும்புப் பயிர் அபிவிருத்திக்கும் வெல்ல உற்பத்திக்கும் அனுகூலமாக கரும்புப் பயிர் நிபுணர் நியமிக்கப்பட்டுள்ளனர். அவருடைய சிப்பந்திகள் கரும்புப் பயிரையும் வெல்ல உற்பத்தியையும் கவனித்து வருகிறார்கள்.

பல்வேறு உணவுத் தானியங்களை அபிவிருத்தி முறையில் பயிரிடுவதில் பயிற்சி பெற இந்த ஜில்லா விவசாயிகளில் 38 நபர்கள் கோயமுத்தூர், திருவெங்கிமலை, ஆடுதுறை, பாலூர், குடியாத்தம் முதலிய இடங்களுக்குச் சுற்றுப் பிரயாணம் செய்து வந்தனர்.

விவசாயிகள் ஓய்ந்த வேளைகளில் பண வருவாயுள்ள உப-தொழிலில் ஈடுபடுவதற்காக 84 தேன் கூடுகள் செயற்கை முறையில் தயாரிக்கப்பட்டுள்ளன. விவசாயிகள் தேனீக்களை வளர்த்து, தேன் உற்பத்தி செய்ய அறிவுறுத்தப்படுகிறார்கள்.

8,750 ஏக்கர் விஸ்தீர்ணமுள்ள பூமி மண் அரிப்பினின்றும் காக்கப்பட்டது. ஆங்காங்குப் பூமி சமம் செய்யப்பட்டது; வரப்பு கோலப்பட்டது; வரப்போரங்களில் வேலியாகச் செடிகள் நட்டுப் பயிரிடப்பட்டுள்ளன.

நமது ஜனநாயக சர்க்கார் பதவி ஏற்றபின் நான்கு வருஷ காலத்தில் சில முக்கிய ஸ்தலங்களில் திருவிழாக்களின்போது 37 விவசாயக் கண்காட்சிகள் நடத்தப்பட்டன. இவை சம்பந்தமாய் சர்க்கார் ரூ. 485 செலவழித்தனர்.

## இரும்பு; எஃகு வினியோகம்

விவசாய சம்பந்தமாய் உபயோகிக்கப்படும் வண்டிச் சக்கரங்களுக்கு இரும்புச் சட்டம், வண்டிப் பார், விவசாயக் கருவிகள் முதலியன செய்வதற்கு 1,584 டன் இரும்பும்

எலும் சப்ளை செய்யப்பட்டன. ரசாயன எரு வகைகள் ஏராளமாய் விநியோகமாகியுள்ளன. விவசாயக் கருவிகள் உற்பத்தி செய்யும் தொழிலாளர்களுக்கு இரும்பும், எஃகும் ஒதுக்கப்பட்டுள்ளன. அத் தொழிலாளர் உற்பத்தி செய்த கருவிகள் விவசாயிகளுக்கு 'கன்ட்ரோல்' விலைக்கு விற்கப் படுகின்றன.

விவசாய அபிவிருத்தியை முன்னிட்டு, உணவுத் தானிய உற்பத்தியில் முதன்மை பெற்று விளங்கும் விவசாயி களுக்கு இனும் வழங்க நமது ஜனநாயக சர்க்கார் முன் வந்துள்ளார்கள். இது வருஷ வாரி நடந்து வருகிறது. இனும் தொகையை ஜில்லா கலெக்டர் யுக்தானுசார நிதி யிலிருந்து வழங்குகிறார். இது வரையில் 66 விவசாயிகள் ரூ. 770 வரையில் இனும் பெற்றுள்ளார்கள்.

### மீன் உணவு

நெல் முதலிய உணவுத் தானியங்களுக்கும் காய் கறி களுக்கும் அடுத்தபடியாக மக்களுக்கு உணவாகப் பயன் படுவது மீன் என்பது யாவரும் அறிந்த விஷயம். ஆதலால் நமது ஜனநாயக சர்க்கார் மீன் இனங்களை, நமது தேவைக்கு ஏற்றவாறு அபிவிருத்தி செய்வதில் ஈடுபட்டுள் ளார்கள். கடற்கரைப் பிரதேசங்களுக்குத் தொலைவில் உள்ள உள்நாட்டு ஜில்லாக்களுக்கு மீன் சப்ளை செய்வதற் கான வழி வகைகள் கோலி வருகிறார்கள்.

மீன்கள் பிடித்து அவற்றை விற்பனை செய்து ஜீவனம் நடத்திவரும் செம்படவர் நிலையை உயர்த்துவதற்குச் சென்னை ராஜ்ய மெங்கும் ஆங்காங்குச் செம்படவர் கூட்டுறவு சங்கங்கள் நிறுவப்பட்டுள்ளன.

செம்படவர்களுக்கிடையே விழிப்பு ஏற்பட்டுள்ளது. மீன் பிடிக்கும் கிராமங்களில் உள்ள செம்படவர்களின் குழந்தைகளுக்கு மீன் பிடிக்கும் தொழில் சம்பந்தமான கல்வி போதிக்கப்படுகிறது. வருஷந்தோறும் 3½ லட்சம் ரூபாய் செலவில், அத்தகைய தொழிற் கல்விச்சாலைகள் 60 பணியாற்றிவருகின்றன. சுமார் 11,000 சிறுவர்கள்

அப்பாடசாலைகளில் கல்வி கற்றுவருகிறார்கள். வலை பின்னுதல், படகுகள் கட்டுதல், உண்பதற்கான மீன் இனங்களின் குணவிசேஷங்களை அறிதல், கடலில் படகுகளைச் செலுத்தி மீன் பிடித்தல் முதலியவை சம்பந்தமான கல்வி அப்பாடசாலைகளில் கற்பிக்கப்படுகிறது. 105 மீன் பிடிப்போர் கூட்டுறவு சங்கங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. 10,000 செம்படவர்கள் அவற்றின் அங்கத்தினராக இருந்து வருகின்றனர். அக் கூட்டுறவு சங்கங்கள் ரூ. 1,62,500 ஐ மூலதனமாகக் கொண்டு பணியாற்றி வருகின்றன.

**மீனினங்களின் விற்பனை**

நம்மிந்திய தேசத்தில் பிடிக்கும் மீனினங்களைப் பாகித்தால் நபர் ஒன்றுக்கு 3·4 பவுண்டு மீன்தான் கிடைக்கும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. இவ்வளவு குறைந்த பட்ச அளவில் கிடைக்கும் மீன்வகைகளை நல்ல நிலைமையில் மக்களுக்கு விற்பனை செய்வதும் கடினமாயிருக்கிறது. பிடிக்கும் மீன்களை உள்ளூர்களுக்குக் கொண்டுபோய் விற்பனை செய்வதற்கு அநுகூலமான ரஸ்தாக்கள் அதிகம் இல்லை. மீன்களைக் கொண்டுபோய்க் கடைகளில் விற்பனை செய்வதற்காக நமது ராஜ்ய சர்க்கார், பிரத்தியேக மீன் மோட்டார் வண்டிகளைத் தயார் செய்துள்ளார்கள். அந்த மீன் மோட்டார் வண்டிகளில் 60 கூடைகளில் மீனினங்களை வைத்துக்கொண்டு 24 நபர்கள் பிரயாணம் செய்யக் கூடிய வசதிகளுண்டு. சில மோட்டார் வண்டிகள் எண்ணூர், திருவான்மியூர் ஆகிய இடங்களிலிருந்து சென்னை நகரிலுள்ள மார்க்கெட்டுகளுக்கு மீன்களை விற்பனைக்குக் கொண்டுபோகின்றன. மேற்கு கோதாவரி ஜில்லாவில் இரண்டு மீன் மோட்டார் வண்டிகள் ஏலூருக்கும் விஜயவாடாவுக்கும் மீன்களைக் கொண்டுபோய் விற்கின்றன. தென் ஆற்காடு ஜில்லாவில், கிள்ளை, சிதம்பரம் ஆகிய இரண்டு இடங்களுக்கும் மோட்டார் வண்டிகள் மீன்களைக் கொண்டுபோய் மக்களுக்கு விற்கின்றன. இவ்வர்த்தகத்தால் சர்க்காருக்குச் சொந்தமான மோட்டார்

வண்டிகளுக்குக் கிடைக்கும் லாபம் கொஞ்சந்தான். குளிர் பதன முறைகளாலும் மீன்களைக் கெட்டுப் போகவிடுவதில்லை. நூற்றுக் கணக்கான மணங்கு எடையுள்ள மீன்கள் மங்களூரிலும் கள்ளிக்கோட்டையிலும்உப்பிட்டு உலர்த்தப்படுகின்றன.

உள்ளூர்களிலுள்ள நீர் நிலைகளில் மீன்களை அபிவிருத்தி செய்வதற்கு நல்ல வசதிகளுண்டு—உள்ளூர் நீர்நிலைகளின் விஸ்தீர்ணம் 875,000 ஏக்கர் ஆகும். இவற்றுள் 250,000 ஏக்கர் பரப்பு வாய்ந்த நீர் நிலைகள் இதுவரையில் பரிசோதனை செய்யப்பட்டுள்ளன—இந் நீர் நிலைகளில் 90 சத விகித நீர்நிலைகள் மீன் வளர்ப்புக்குத் தகுதிவாய்ந்தவை எனக் கண்டறியப்பட்டுள்ளது. கோடிக்கணக்கான மீன் குஞ்சுகளைச் சேகரித்து 50,000 ஏகர் பரப்பு வாய்ந்த நீர் நிலைகளில் வளர்ப்பதற்கான திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.

**காட்டுப்பிரதேச அபிவிருத்தி**

இந்த ஜில்லாவின் காட்டுப்பிரதேசங்கள் கீழ்ப் பகுதி, மேற்பகுதி என இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. மேற்பகுதியில் சென்ற நான்கு வருஷ காலமாக யாதொரு அபிவிருத்திமுறையும் கையாளப்படவில்லை. ஆனால் அப்பகுதியிலுள்ள 53 சதுர மைல் பரப்பு வாய்ந்த பஞ்சாயத்துக் காடுகளைத் தகுந்த நிர்வாகத்தின் பொருட்டு சர்க்கார் காட்டு இலாகாவுக்கு மாற்றிவிட்டனர்.

கீழ்ப் பகுதியிலுள்ள காடுகள் இரு வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன :—

முதல் வகுப்பு [இலாகா சம்பந்தமான ரிசெர்வ் காடுகள் (ஒதுக்கப்பட்ட காடுகள்)]—470·82 சதுர மைல் பரப்பு வாய்ந்தவை.

மூன்றும் வகுப்பு (விவசாயிகள் அல்லது பஞ்சாயத்து ரிசெர்வ் காடுகள்)—203·03 சதுர மைல் பரப்பு வாய்ந்தவை.

14·88 சதுர மைல் பரப்பு வாய்ந்த பஞ்சாயத்து காடுகள் 1945-ம் ஆண்டில் காட்டிலாகாவுக்கு மாற்றப்பட்டு

விட்டன. எஞ்சிய பஞ்சாயத்து ரிசெர்வ் காடுகளை 1950-ம் ஆண்டின் முடிவில் காட்டு இலாகா தன் நிர்வாகத்துக்கு எடுத்துக்கொண்டது.

பாலாற்றங் கரையிலும் இதர ஆற்றங்கரையிலு முள்ள குடியாத்தம், வாலாஜா தாலூகாக்களில் 114·54 ஏக்கர் நிலங்கள் ஒதுக்கப்பட்ட நிலங்களாகக் கருதப்பட்டு கீழ்ப் பகுதி காட்டிலாகாவோடு சேர்த்துக் கொள்ளப் பட்டுள்ளன இப் பிரதேசத்தில், 1946–47, 1947–48-ம் ஆண்டுகளில் சவுக்கு மரங்கள் பயிரிடப்பட்டன.

இந்த ஜில்லாவில் கீழ்ப்பகுதியில் ரிசெர்வ் காடுகளில் வளர்ந்துள்ள சந்தன மரங்கள், விறகுக்கான மரங்கள், மூங்கில் ஆகியவற்றின் மூலம் சர்க்காருக்கு வருவாய் வந்து கொண்டிருக்கிறது.

பட்டுப் போன, முற்றின சந்தன மரங்கள் அவ்வப் போது நல்ல விலைக்கு விற்கப்படுகின்றன.

அக்காடுகளுக்குச் சமீபத்திலுள்ள நகரங்களுக்கும், கிராமங்களுக்கும் தேவையான அளவுக்கு விறகுகள், மூங்கில்கள் கிரமமாக சப்ளை செய்யப்பட்டு வருகின்றன.

அப்பிரதேச மக்களின் விவசாயத்துக்கும் வீட்டுஉபயோ கத்துக்கும் தேவையான (காடுகளில் விளையும்) பொருள்கள் திருப்திகரமாக சப்ளை யாகின்றன.

பிரதேசக் கால் நடைகள் அங்கு மேய்வதற்கு வசதி யளிக்கப்பட்டுள்ளது. வீட்டு உபயோகத்துக்காக, அக் காடுகளை அடுத்துள்ள கிராம வாசிகள் இலவசமாகப்புல் வெட்டிக் கொண்டுபோக அநுமதிக்கப்பட்டுள்ளனர்.

ரிசெர்வ் காடுகளுக்கு மேய்ச்சலின் பொருட்டுச் செல்லும் கால் நடைகளுக்கும் அவற்றை நடத்திச் செல்லும் மேய்ப்பாளர்களுக்கும் ஜல வசதி ஏற்படுத்த மேய்ச்சல் நிலங்களிலுள்ள காட்டு ரஸ்தாக்கள், கட்டிடங்கள், கிணறுகள், குளங்கள் நல்ல நிலைமையில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

இந்த ஜில்லாவின் கீழ்ப்பகுதியிலுள்ள காடுகள் மூலம் நமது சர்க்காருக்கு வருஷவாரி சுமார் 4 லட்சம் ரூபா

வரும்படி வருகிறது. ரிசெர்வ் காடுகளை நிர்வகிப்பதற்கும் பரிபாலிப்பதற்கும் வருஷந்தோறும் ரூ 1·5 லட்சம் செலவாகிறது. செலவு நீங்கலாக நிகர வருவாய் ரூ. 2·5 லட்சமாகும். இத்தொகையை நமது சர்க்கார் இதர அபிவிருத்தி காரியங்களுக்குச் செலவு செய்கிறார்கள்.

## மலைவாசிகளுக்குச் சலுகைகள்

போளூர் ஜவ்வாதுமலை, சாந்த வாசல் குன்றுகளுக்கிடையே அநேக கிராமங்கள் உள. இக்கிராமங்களில் வசிக்கும் "மலையாளிகள்" என்னும் வகுப்பினருக்கு, காடுகளில் தங்கள் கால்நடைகளை இலவசமாய் மேயவிடும் சலுகை வழங்கப்பெற்றது. இதற்கு ஈடாக அவர்கள் காட்டிலாகாவினருக்குச் சில சேவைகள் செய்யவேண்டும். இந்த வகுப்பினர் தங்களுக்கு இலவச மேய்ச்சலுக்கு விடப்பட்ட மேய்கால் நிலங்களைத் தீயினின்றும், அந்நிலங்களில் விளையும் பொருள்களைக் களவாடவரும் கள்வர்களினின்றும் காக்கவேண்டும் ; சந்தன மரங்களைச் சுற்றிலும் காட்டுக் கொடிகளை ஏறவிடக்கூடாது, அந்தந்தக் காட்டுப் பிரதேசங்களில் காட்டு இலாகாவினர் ஏவும் வேலைகளைச் செய்ய கூலிக்குத் தொழிலாளர்களை 'சப்ளை' செய்ய வேண்டும். இவ்வாறு மேற்படி மலையாளிகள் தங்கள் கடமைகளைச் சரிவர நிறைவேற்றினால், அவர்கள் தங்கள் கால்நடைகளின் மேய்ச்சலுக்காகச் சர்க்காருக்குச் செலுத்தியுள்ள மேய்ச்சல் கட்டணத்தை சர்க்கார் அவர்களுக்கு வாபஸ் செய்துவிடுவார்கள். மேய்ச்சல் நிலங்களைத் தீ அணுக வொட்டாமல் காப்பாற்றினால் அவர்களுக்குச் சர்க்கார் வெகுமதி யளிப்பார்கள். அதுவுமல்லாமல், அவர்களுடைய விவசாயத் தொழிலுக்கும், வீட்டுக் காரியங்களுக்கும் தேவையான விறகு, மூங்கில், மரத் துண்டுகள், பலகைகள், வீட்டுக் கூரை வேய்வதற்கான புல் முதலியவற்றைச் சர்க்கார் அவர்களுக்கு இலவசமாக வழங்குவார்கள்.

இச் சலுகைகளை மலையாளிகளுக்கு நமது ராஜ்ய சர்க்கார் 1946-ம் ஆண்டிலிருந்து தொடர்ந்து வழங்கி

வருகிறார்கள். இந்த மலையாளிகளின் குழந்தைகளுக்குக் கல்வி போதிக்க நமது சர்க்கார் 1950-ம் ஆண்டிலிருந்து இரண்டு பாடசாலைகள் நடத்த அனுமதியளித்துள்ளனர். இவ்விருபாடசாலைகளுள் ஒன்று 1950-ம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் ஜம்ன மரத்தூர் கிராமத்தில் திறந்து வைக்கப்பட்டது. மற்றொன்று வீரப்பனூர் கிராமத்தில் கூடிய சீக்கிரம் அமைக்கப்படும்.

தற்காலிக சாகுபடிக்காக சுற்றுப்புற கிராமங்களுக்குக் 'குமரி முறையில்' பயிரிட, சிறுசிறு நிலத்துண்டுகள் 1946–47, 1947–48-ம் ஆண்டுகளில் வழங்கப்பட்டுள்ளன. அவ்வாறு வழங்கப்பட்ட நிலங்களின் மொத்த விஸ்தீர்ணம் 71 ஏக்கராகும். இந்நிலங்கள் ஒதுக்கப்பட்ட காடுகளைச் சேர்ந்தவை. இந்நிலங்களில் உணவுக்குரிய தானியங்கள் பயிரிட அனுமதிக்கப்படும்.

பசுந் தழைகளை விவசாய அபிவிருத்திக்காக, கிராம வாசிகள் கொண்டுபோக அனுமதிச் சீட்டுகள் வழங்கப்பட்டுள்ளன.

## கால்நடைகளின் பராமரிப்பு

நமது ராஜ்ய சர்க்கார் தாம் மேற்கொண்டுள்ள உணவு உற்பத்திப் பெருக்கத்துக்கு அநுகூலமாக, கால்நடைகளின் பராமரிப்பில் பெருஞ் சிரத்தை காட்டி வருகிறார்கள்.

இந்த ஜில்லாவில் வேலூர், திருவண்ணாமலை, ராணிப்பேட்டை, அரக்கோணம் என்னும் இடங்களில் 4 மிருக வைத்திய சாலைகள் நிறுவப்பட்டுள்ளன. ஊரூராய்ச் சுற்றி, கால் நடைகளுக்கு வைத்தியம் செய்து வந்த ஸ்தாபனங்களில் மூன்று திருப்பத்தூர், குடியாத்தம், செய்யாறு ஆகிய ஊர்களில் சிறுசிறு மிருக வைத்திய சாலைகளாக மாற்றப்பட்டு நிரந்தரமாகப் பணியாற்றி வருகின்றன.

## மருந்து உற்பத்திச் சாலை

கால் நடைகளுக்கு ஏற்படும் தொற்று நோய்களைத் தடுப்பதற்காக ஊசி மருந்துகளும், அம்மைப் பாலும்

உற்பத்தி செய்யும் தொழிற்சாலை முதன் முதலில் கோயமுத்தூரில் தற்காலிகமாக அமைக்கப்பட்டது. நமது ராஜ்ய சர்க்கார் ராணிப்பேட்டையில் 58·70 ஏக்கர் விஸ்தீரண முள்ள நிலம் வாங்கி அங்கு ரூ. 3·36 லட்சம் செலவில் அத்தகைய தொழிற்சாலை ஒன்று அமைத்துள்ளனர். கோயமுத்தூரிலிருந்த அத் தொழிற்சாலை ராணிப்பேட்டையில் நிறுவப்பட்ட புதிய கட்டிடத்திற்கு 1948-ம் ஆண்டில் மாற்றப்பட்டுவிட்டது. கோயமுத்தூரிலிருந்த மிருக வைத்திய பரிசோதனை அதிகாரி, உதவி அதிகாரி ஆகியோரின் காரியாலயங்களும் 1948-ம்வரு ராணிப் பேட்டைக்கு மாற்றப்பட்டுவிட்டன.

இத் தொழிற்சாலையை அபிவிருத்தி செய்வதற்கும், அதில் இன்னும் பல வசதிகளேற்படுத்தவும் ஒரு லட்சம் ரூபாய் அநுமதிக்கப்பட்டுள்ளது. மிருக வைத்தியசாலையிலும், ஆராய்ச்சி நிலையத்திலும் பணியாற்றும் சிப்பந்திகளின் சௌகரியத்தை உத்தேசித்து அங்கு ஒரு ரேடியோ செட்டு நமது சர்க்காரால் நிறுவப்பட்டுள்ளது.

கால்நடைப்பண்ணை வைத்திருப்போருக்குக் குத்தகைக்குவிட 5 பொலி காளைகளும், மக்களுக்கு விநியோகிக்க 3 பொலி காளைகளும், மிருக வைத்திய ஸ்தாபனங்களில் 6 பொலி காளைகளும் பரிபாலிக்கப்பட்டு வருகின்றன. ராணிப்பேட்டை மிருக வைத்திய சாலையில் கோழிகளின் வைத்தியத்துக்கும் வழி கோலப்பட்டுள்ளது அங்கு உயர்ந்த ரகக் கோழிகளும் முட்



டைகளும் விற்கப்படுகின்றன ; கால் நடைக் காட்சிகள் இருமுறை நடைபெற்றன.

## கால்நடை வைத்தியம்

இந்த ஜில்லாவின் பிர்க்காக்களில் 2 மிருக வைத்திய நிபுணர்களும், ஒரு ஸ்டாக்மன் கம்பவுண்டரும் கால் நடைகளுக்குத் தேவையானபோது வைத்தியம் செய்து வருகிறார்கள் ; ஊசிபோடுகிறார்கள். கால் நடைப் பரிபாலன சங்கம் ஒன்று ஒடுகாத்தூரில் அமைக்கப்பட்டிருக்கிறது. அச்சங்கத்தைச் சேர்ந்த அங்கத்தினர் கால் நடைகளை அபிவிருத்தி செய்து கொள்வதற்காக 6 பொலி காளைகள் வைத்திருக்கிறார்கள். இவ்வபிவிருத்தித் தொழிலுக்காக ஒரு ஸ்டாக்மன் கம்பவுண்டரும் நியமிக்கப்பட்டுள்ளார்.

காட்டுப் பாடியில் உள்ள அமெரிக்கன் ஆற்காடு மிஷன் ஸ்தாபனத்தார் கோழிப்பண்ணையை விஸ்தரித்து அபிவிருத்தி செய்வதற்கு நமது சர்க்கார் இது காறும் வழங்கி வந்த மான்யத் தொகையை அதிகப்படுத்தியுள்ளார்கள்.

## நிலச் சீர்திருத்தம் ; ஜமீன்தாரிமுறை நீக்கம்

உழவுத்தொழிலில் ஈடுபட்டு உழைத்து வரும் விவசாயிகளின் நிலைமையை உயர்த்துவதும் அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை அபிவிருத்தி செய்வதுமே நமது ஜனநாயக சர்க்காரின் கண்ணியமான நோக்கம். இந்நோக்கத்தை நிறைவேற்றிவைக்க நமது சர்க்கார் நிலச் சீர்திருத்தம் செய்ய திட்டமிட்டுள்ளார்கள்.

சர்க்கார் மேற்கொண்டுள்ள சீர்திருத்தங்கள் சரிவர நிறைவேறுவதைத் தடுத்து நிற்பது ஜமீன் தாரிமுறையாம். அதனால் அவர்கள் ஜமீன் தாரிமுறையைத் தொலைக்கத் தீர்மானித்தார்கள்.

உடனே நமது சர்க்கார் ஜமீன்தாரிமுறை நீக்கச் சட்டத்தைச் சட்ட சபையில் நிறைவேற்றி வைத்தார்கள். சர்க்காருக்கும், நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழுது

பயிரிடும் விவசாயிகளுக்கும் இடையே இருந்து பேரூதியம் பெற்றுவந்த ஜமீன்தார்கள் பதவியினின்று நீக்கிவிடப் பட்டனர்.

ஜமீன்தாரி நிலங்கள்யாவும் ரயத்துவாரி நிலங்களாக மாற்றப்பட முன்னேற்பாடுகள் நடை பெற்று வருகின்றன. ஜமீன்தார்களின் உரிமைகளும் புறக்கணிக்கப்படவில்லை. ஜமீன்தார்களுக்கு நமது சர்க்கார் நிலங்களுக்குப் பதிலாக நஷ்ட ஈடுகொடுத்துதவ சம்மதித்துள்ளார்கள்.

ஜமீன்தாரிப் பிரதேச விவசாயிகள் சாகுபடி செய்து வரும் நிலங்களுக்குரிய வரியைக் குறைத்து ரயத்துவாரி நிலவரிக்கு ஈடாகச் செய்ய முயற்சி எடுக்கப்பட்டுவருகிறது. நில குத்தகைச் சீர்திருத்தத்தைக் குறித்தும், காணியாட்சி முறைகளின் சீரமைப்பைப் பற்றியும் நமது சர்க்கார் பரிசீலனை செய்து வருகிறார்கள்.

## வன மஹோற்சவம்

காட்டு இலாகாவினர், ரெவினியூ, விவசாய இலாகாவினரோடு ஒத்துழைத்து, நகரங்களிலும், கிராமங்களிலும் செடிகள் நட்டுப் பயிரிடுவதற் காகப் பொது மக்களுக்கு விதைகளும், நாற்றுக்களும் ஒவ்வொரு வருஷமும் வன மஹோற்சவ வாரத்தில் வழங்கி வருகின்றனர். வேலூர் கீழ்ப்பகுதியைச் சேர்ந்த காட்டுப் பிரதேச ரஸ்தாக்களிலும் தக்க இடங்களிலும் புளியங்கன்றுகள் வளர்க்கப்படுகின்றன.



காட்டிலாகாவினர் ஏழை கிராமவாசிகளுக்கு வீடுகட்டுவதற்கான பொருள்களை இலவசமாக வழங்குகின்றனர்.

ஜவ்வாது மலை, கல்ராயன் மலை ஆகிய மலைகளைச் சுற்றியுள்ள கிராமவாசிகளும் விவசாயிகளும் வருஷந்தோறும் ஜில்லா காட்டு அதிகாரி கூட்டும் கூட்டத்திற்குவந்து தீயைத் தடுத்ததற்கு வெகுமதியும், மேய்ச்சல் கட்டண வாபஸ் தொகையும் பெற்றுப் போவார்கள். அச் சமயத்தில் தங்கள் குறைபாடுகளையும் அதிகாரிகளுக்குத் தெரிவித்துக் கொள்வார்கள்.

## கிராமப் புனருத்தாரணம்

நமது ராஜ்ய சர்க்கார் ஜமீன்தாரிமுறையை ஒழித்துக் கிராமப் புனருத்தாரணம் செய்வதில் ஈடுபட்டுள்ளனர். 80 சத விகித இந்திய மக்கள் கிராமவாசிகள். அவர்கள் மூலம் இந்திய மக்கள் அனைவரும் உண்ண உணவும், உடுக்க உடையும் பெற்று வருகிறார்கள். அவர்கள் வசித்து வரும் கிராமங்களும், சீர் கேடடைந்துள்ளன. அவர்களுடைய குறைபாடுகளை நீக்க நமது சர்க்கார் மிகச் சிரத்தைகாட்டி வருகிறார்கள்.

ட்ராக்டர்கள், புல் டோஸர்கள் மூலம் நிலங்கள் பண்படுத்தப்படுகின்றன ; தரிசு நிலங்கள் சாகுபடிக்குத் தக்கவாறு சீர்திருத்தப்படுகின்றன. ஆங்காங்குள்ள ஏரி, குளங்கள் மராமத்து செய்யப்பட்டு வருகின்றன. புதிய கிணறுகள் வெட்ட சர்க்கார் விவசாயிகளுக்கு மான்யங்கள் வழங்கிவருகின்றனர். இங்குள்ள கிராமங்கள் பெரிய ரஸ்தாக்களோடு இணைக்கப்பட்டு, அவற்றுக்குப் போக்கு வரத்து வசதிகள் அளிக்கப்படுகின்றன.

பருவக்கோளாறுகளால் பாதிக்கப்பெற்ற ஜில்லாக்களில் 1359-ம் பசலிக்கு நன் செய், புன் செய் நிலங்கள் சம்பந்தமாய் நமது ஜன நாயக சர்க்கார் வரி வஜா செய்துள்ளார்கள். அதனால், இந்த ஜில்லா விவசாயிகள் விளைச்சல் இல்லாத நிலங்களுக்கு 1359-ம் பசலியில் (1949–50) ரூ. 9,20,439 வரி வஜா பெற்றனர்.

# பொது நல வசதிகள்

மழையையே எதிர்பார்த்து நிற்க வேண்டிய புன்செய் நிலங்களுக்கு நீர் நிலைகளின் மூலம் பாசன வசதிகளை ஏற்படுத்தினால், நாட்டின் வளம் பன்மடங்கு பெருகுவதோடு, அம் முயற்சியில் ஈடுபடுவோருக்கு அழியாப் புகழும் உண்டாகும்.

—புறநானூறு,
18-ம் பாட்டின் கருத்து.

உடலெங்கும் உதிரம் பாய்ச்சி உடலுக்கு உறுதி பயப்பது நரம்புகளின் தொழில்; அந்நரம்புகளே போல் ஒரு நாட்டுக்குப் பயனளிப்பவை அங்குள்ள ரஸ்தாக்களேயாம். ரஸ்தாக்கள் மூலம் நாட்டு மக்களின் போக்குவரத்து விருத்தியடைகிறது. பல நாட்டு மக்களும் ஒன்றுகூடி அளவளாவுகின்றனர். வியாபாரம் பலத்து ஓங்குகிறது.

இந்த ஜில்லாவில், போதுமான மழையின்மையாலும், ஆறுகளின் மூலம் ஜல வருவாய் குறைந்திருப்பதாலும் நீர்ப்பாசனம்பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது. இங்கு உணவு உற்பத்திப் பெருக்க திட்டம் வெற்றிகரமாக நடைபெறுவதற்கு வழியில்லை.

## நீர்ப்பாசனம்

ஆதலால், சாகுபடி செய்யப்படும் ஆயக்கட்டுக்களுக் கிடையேயுள்ள நீர் நிலைகளுக்குப் போதிய நீர் சப்ளை செய் வதை முக்கிய நோக்கமாகக் கொண்டு நமது சர்க்கார் சில நீர் நிலைகளைச் சீரமைத்துள்ளார்கள்.

செங்கம் தாலூகாவில் உள்ள கஞ்சிகுண்டம் ரூ. 47,500 செலவில் பழுதுபார்த்துச் சீர்திருத்தி அமைக்கப்பட்டது. இதன் மூலம் 246 ஏக்கர் நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதி ஏற்படும். இந் நீர்ப்பாசன வசதியால் 200 டன் உணவுத் தானியங்கள் அதிகமாகக் கிடைக்கக்கூடுமென்று எதிர் பார்க்கப்படுகிறது.

30,000 ரூபாய் செலவில் கட்டகரம்பாளையம் அணைக் கட்டு புதுப்பிக்கப் பட்டுள்ளது. இந் நீர் நிலையால் 675 ஏக்கர் விஸ்தீர் ணங் கொண்ட ஆயக்கட்டுக்கு நீர்ப் பாசன வசதி கிடைக்கும்.



போளூர் ஏரிக்கு ஜல சப்ளைசெய்யும் மஞ்சளாற்றுக்கு ஏற்பட்டுள்ள பழுதுகளைச் சீர் திருத்தவும், அவ்வேரி ஜலத்தை நிலங்களுக்குக் கொண்டு செல்லும் கால்வாயை அகலப்படுத்தவும் முறையே ரூ. 13,700-ம் ரூ. 2,510-ம் செலவாகும். இவ் வேலைகள் நடந் தேறி வருகின்றன. இச் சீர்திருத்தங்களால் 1,137 ஏக்கர் விஸ்தீர்ணங் கொண்ட ஆயக்கட்டுக்கு நீர்ப்பாசன வசதி கிடைக்கும்.

## ஏரிகரையை உயர்த்தல்

வாலாஜா தாலூகாவிலுள்ள செங்கால் நத்தம் ஏரி கரை ரூ. 5,030 செலவில் இரண்டடி உயர்த்தப்பட்டுள்ளது. இந்த ஏரியின் மூலம் 76 ஏக்கர் நிலங்களுக்கு ஜல வசதி கிடைக்கும். இன்னும் 25 ஏக்கர் பூமி நன்செய்யாகுபடிக்கு லாயக்காகும். அதனுல் 15 டன் உணவுத் தானியங்கள் அதிகமாக உற்பத்தியாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

குடியாத்தம் தாலூகாவிலுள்ள காவனூர் ஏரிக்கு ரூ. 7,500 செலவில் ஜல சப்ளை கால்வாய் ஒன்று புதிதாக வெட்டப்பட்டு வருகிறது. இதன் மூலம் இப்போதுள்ள 470 ஏக்கர் பரப்பு வாய்ந்த ஆயக்கட்டுக்கு நல்ல நீர்ப்பாசனம் கிடைக்கும்.

போளூர் தாலூகாவிலுள்ள வம்பலூர் ஏரிக்கு ரூ. 9,000 செலவில் ஒரு புதிய கால்வாய் வெட்டி இணைக்கப்பட்டு வருகிறது. இவ்விதம் இணைக்கப்படுவதால் 220 ஏக்கர் பூமி நீர்ப்பாசன வசதிபெறும்.

ராணிப்பேட்டைக்கு அருகில் உள்ள வனபாடி சித்தேரி ரூ. 2,340 செலவில் புதுப்பிக்கப்பட்டு வருகிறது. இது முடிவடைந்தால், இதன் மூலம் 20 ஏக்கர் விஸ்தீரணம் கொண்ட அதிகப்படியான நிலங்கள் நீர்ப்பாசனம் பெறும். அந் நிலங்களில் 8 டன் உணவுத் தானியங்கள் அதிகமாகக் கிடைக்கும்.

வந்தவாசி தாலூகாவில் உள்ள மருதாடு என்னும் ஏரியிலிருந்து 743 ஏக்கர் நிலம் நீர்ப்பாசனம் பெறுகிறது. இந் நீர்ப் பாசனத்தை ஸ்திரப்படுத்த ரூ. 3,030 செலவில் ஒரு தனிக் கால்வாய் வெட்டப்பட்டு வருகிறது.

கீழ் வாராணம் தாங்கலுக்கு ஜல சப்ளை செய்யும் கால்வாய் ரூ. 6,700 செலவில் பழுது பார்க்கப்பட்டு வருகிறது. இதனுல் 90 ஏக்கர் விஸ்தீர்ணம் வாய்ந்த நிலங்கள் பயனடையும்.

அவலூர் ஊற்றுக் கால்வாய் ஜலத்தை நிலங்களுக்குப் பாய்ச்ச, தாமல் கால்வாய்க்குக் குறுக்கே ரூ. 2,740 செலவில்

ஒரு "சைபன்" கட்டப்பட்டு வருகிறது. 446 ஏக்கர் பூமிக்கு நீர்ப்பாசனம் அளிக்க இது பேருதவியாய் இருக்கும்.

தூசி ஏரியைச் சேர்ந்த காக்கா மடுவில் ரூ. 4,640 செலவில் நீர்ப் போக்குக்கான வசதி செய்யப்பட்டுளளது. இதனுல் இப்போதுள்ள 1,000 ஏக்கர் நிலங்கள் பாசன வசதி பெறும்.

## தூர்வாருதல்

தூர்ந்து போயிருக்கும் ஜல சப்ளை கால்வாய்களைச் சர்க்கார் கீழே குறித்துள்ளவாறு தங்கள் செலவில் தூர் வாரிச் செம்மைப்படுத்தியுள்ளார்கள்.

| வருஷம். | கால்வாய்களின் எண்ணிக்கை. | செலவான தொகை ரூ. |
|---|---|---|
| 1946–47 | 40 | 34,500 |
| 1947–48 | 39 | 52,500 |
| 1948–49 | 31 | 32,500 |
| 1949–50 (டிசம்பர்மீ முடிய) | 13 | 17,500 |

ரெவினியூ இலாகாவின் ஆதீனத்திலுள்ள சிறு சிறு நீர்ப்பாசன வேலைகள் சர்க்கார் அங்கீகாரம் பெற்றவை. அவையாவன :

போளூர் தாலூகாவில் உள்ள அடமங்கலம் ஏரிக்கு 4,100 செலவில் ஒரு ஜல சப்ளை கால்வாய் வெட்ட ஏற்பாடாயிருக்கிறது. இக் கால்வாய் வெட்டி முடிவடைந்தால் 11·35 ஏக்கர் நிலங்கள் அதிகப்படியாக நீர்ப்பாசனவசதி பெறும். அந் நிலங்களில் 10 டன் உணவுத் தானியங்கள் அதிகமாக உற்பத்தியாகும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

திருவண்ணமலை தாலூகாவிலுள்ள உலையாற்றுக்குக் குறுக்கே, 4,500 ரூபாய் செலவில் ஒரு கல்லணைக்கட்டு அமைக்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. இதனுல், அதிகப்படியான 98 ஏக்கர் பூமிக்கு நீர்ப்பாசன வசதி

ROJA MUTHIAH
47, HOSPITAL STREET
KOTTAIYUR-623 106
P. M. DIST - TAMIL NADU

கிடைக்கலாம். இந்நிலங்களின் மூலம் 49 டன் உணவுத் தானியங்கள் அதிகமாக உற்பத்தியாகும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

துரிஞ்சலாற்றுக்குக் குறுக்கே கட்டப்பட்டுள்ள கீரனூர் அணைக்கட்டைப் புதுப்பிக்கச் செலவாகும் தொகை ரூ. 11,370-ஐ சர்க்கார் அனுமதித்துள்ளார்கள். இந்த அணைக்கட்டு புதுப்பிக்கப்பட்டுவிட்டால் அதிகப்படியாய் 140 ஏக்கர் பூமிக்குப் பாசனம் கிடைக்கலாம். இந் நிலங்களில் 70 டன் உணவுத் தானியங்கள் அதிகமாகக் கிடைக்குமென்று எதிர் பார்க்கப்படுகிறது.

9,500 ரூபாய் செலவில் பனப்பாக்கம் கசம் கால்வாயைப் பழுது பார்க்க சர்க்கார் அனுமதித்துள்ளார்கள். இதுவரையில் தரிசாகக் கைவிடப் பட்டிருந்த 53 ஏக்கர் பூமி நீர்ப்பாசனம்பெறும். இப் பூமியில் 27 டன் உணவுத் தானியங்கள் உற்பத்தியாகுமென்று எதிர் பார்க்கப்படுகிறது.

ஏரி, குளங்களின் அபிவிருத்தி திட்டத்தை நிறைவேற்றிவைக்க இரண்டு உதவி என்ஜினியர்கள் நியமிக்கப்பட்டுள்ளார்கள். இந்த ஜில்லாவில் ஜமீன் கிராமங்களில் நெடுங்காலம் கேட்பாரற்றுக் கிடந்த நீர்ப்பாசன வசதிகளைப் பழுது பார்த்தல், அபிவிருத்தி செய்தல் ஆகிய வேலைகளை இவர்கள் பார்வையிட்டு வருகிறார்கள்; ரயத்துவாரி கிராமங்களிலுள்ள நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதியளிக்கும் ஏரி, குளங்களை மராமத்து பார்க்கும் தொழிலிலும் ஈடுபட்டுள்ளார்கள்.

## புதிய கிணறுகளுக்கு மான்யம்

வருஷம் 1947–48 ; மான்யம் பெற்ற கிணறுகள் 1,076 ; மான்யத் தொகை ரூபாய் 3,17,870 ; முடிந்த கிணறுகள் 881 ; நீர்ப்பாசனம் பெறும் நிலங்களின் பரப்பு ஏக்கர் 1,079·26 ; உற்பத்தியாகும் நெல் டன் 477.

வருஷம் 1948–49 ; மான்யம் பெற்ற கிணறுகள் 1,048 ; மான்யத் தொகை ரூபாய் 5,00,000 ; முடிந்த கிணறுகள் 462 ; நீர்ப்பாசனம் பெறும் நிலங்களின் பரப்பு ஏக்கர்

557·32 ; உற்பத்தியாகும் நெல் டன் 293·31.

வருஷம் 1949–50 ; மான்யம் பெற்ற கிணறுகள் 2,252 ; மான்யத் தொகை ரூபாய் 11,17,650 ; முடிந்த கிணறுகள் 362 ; நீர்ப்பாசனம் பெறும் நிலங்களின் பரப்பு ஏக்கர் 493·67 ; உற்பத்தியாகும் நெல் டன் 14,971

வருஷம் 1950–51 ; மான்யம் பெற்ற கிணறுகள் 1,099 ; மான்யத் தொகை ரூபாய் 5,45,000 ; முடிந்த கிணறுகள் 37 ; நீர்ப்பாசனம் பெறும் நிலங்களின் பரப்பு ஏக்கர் 82·38 ; உற்பத்தியாகும் நெல் டன் 18·33.

### சர்க்கார் வழங்கியுள்ள கடன்

காளைகள் வாங்குவதற்கும், பம்ப் செட்டுகள் அமைப்பதற்கும், விவசாயிகளுக்குச் சர்க்கார் வழங்கிய கடன் தொகையின் ஜாபிதா :—

| வருஷம். | வழங்கிய கடன் தொகை ரூபாய். |
|---|---|
| 1946–47 ... ... | 2,26,154 |
| 1947–48 ... ... | 2,07,236 |
| 1948–49 ... ... | 2,71,255 |
| 1949–50 ... ... | 11,82,120 |
| 1950–51 ... ... | 11,33,903 |

வேலூர் தாலூகாவில் அகரம் நதியிலிருந்து அதிகப்படியானத் தண்ணீரைப் பயன் படுத்தவேண்டி ஒடுகத்தூர் கிராமத்தில், ஒடுகத்தூர் கால்வாயில் ஓர் அணைகட்டவும், அக்கால்வாயைச் சீர்திருத்தவும் 50,482 ரூபாய் செலவில் திட்டமிடப்பட்டிருக்கிறது. இதன் பயனாக, பூரா ஆயக்கட்டான 131 ஏக்கர் பூமியும் நன்செய் சாகுபடிக்கு லாயக்காக மாற்றப்படும். இதனால் வருஷத்துக்கு 66 டன் உணவுத் தானியங்கள் அதிகப்படியாகக் கிடைக்கும் என எதிர் பார்க்கப்படுகிறது.

கங்குந்தி கிராமத்திலுள்ள கங்குந்தி எஸ்டேட் எல்லைக்குள் பாலாற்றுக்குக் குறுக்கே நீர் நிலையமொன்று நிறுவும்

திட்டங்களைக் குறித்துத் தீர பரிசீலனை நடத்தப்பட்டு வருகிறது. இதன் மூலம் முதல் போகப் பயிர் சாகுபடி செய்யக்கூடிய 70,000 ஏக்கர் பரப்பு வாய்ந்த நிலங்களுக்கும், இரண்டாம் போகச் சாகுபடி செய்யக்கூடிய 30,000 ஏக்கர் விஸ்தீரணமுள்ள நிலங்களுக்கும் நீர்ப்பாசன வசதிகளை அதிகப்படுத்தவும், இன்னும் 15,000 ஏக்கர் விஸ்தீர்ணமுள்ள நிலங்களில் கால மழை தவறுத காலங்களில் இரண்டாம் போகப் பயிர் சாகுபடி செய்வதற்கு அநுகூலமாயிருக்கவும் ஏற்பாடு செய்யப்படுமென்று எதிர் பார்க்கப் படுகிறது.

### மின்சார வினியோகம்

சென்ற ஐந்து வருஷ காலத்தில் மின்சார வினியோகம் இந்த ஜில்லாவிலுள்ள கிராமங்களுக்கு விஸ்தரிக்கப் பட்டது.

1946–47-ஆம் ஆண்டில் கீழ்க்கண்ட கிராமங்கள் மின் சார வசதி பெற்றன.

(1) ஆட்டுப்பாக்கம், (2) பச்சல் மிட்டா, (3) எடயார், (4) வாணியம்பாடி, (5) கொறுக்கை, (6) கெடப்பேரி, (7) பனங்காஞூர்.

1947–48-ம் ஆண்டில் மின்சார வசதி பெற்ற கிராமங்கள் பின் வருமாறு :—

(1) பனப்பாக்கம், (2) சாத்தம்பாக்கம், (3) தலங்கை, (4) லோகபுரம், (5) வங்கூர், (6) பெண்ணகர்.

1948–49-ஆம் ஆண்டில் மின்சார வசதிபெற்ற கிராமங்களின் பெயர் கீழே தரப்பட்டுள்ளன :—

(1) பரமேஸ்வரமங்கலம், (2) கொண்டவெட்டித் தாங்கல், (3) காசிநாய்க்கன்பட்டி, (4) ஆளேபிராண்டன், (5) அதியனேந்தல்

கீழே குறித்துள்ள கிராமங்களுக்கு 1949–50-ம் ஆண்டில் மின்சார வினியோகம் விஸ்தரிக்கப்பட்டது.

(1) புத்தேரி, (2) ரெண்டேரிப்பேட்டை, (3) மேலப்புதுப்பாக்கம்.

1950–51-ம் ஆண்டில் மின்சார வினியோகம் விஸ்தரிக்கப்பட்ட கிராமங்கள் பின்வருமாறு :

(1) மாம்பாக்கம், (2) சேலை, (3) வாழைப் பந்தல், (4) கலசப்பாக்கம், (5) காப்பலூர், (6) குருவி மலை, (7) பூசவாக்கம், (8) காட்டேரி, (9) நடுக்குப்பம்.

விஸ்தரிப்பு

தற்போது இந்த ஜில்லாவில் 2,578 வீடுகளுக்கும், 103 கைத்தொழில் ஸ்தாபனங்களுக்கும், 560 விவசாய வேலைகள் சம்பந்தமாகவும் மின்சாரம் வினியோகிக்கப்பட்டு வருகிறது. நமது ஜன நாயக சர்க்கார் பதவி யேற்ற சமயத்திலிருந்து இதுவரையில் மின்சார விஸ்தரிப்பு சம்பந்தமாய் இந்த ஜில்லாவுக்காகச் செலவழித்துள்ள மொத்த தொகை ரூ. 9,69,600.



இந்த ஜில்லாவில் 1945–46-ம் ஆண்டில் செலவழிந்த மின்சாரம் 50,72,761 யூனிட்டுகள் ஆகும். 1949–50-ஆம் ஆண்டில் 10,451,374 மின்சார யூனிட்டுகள் செலவழிக்கப்பட்டுள்ளன.

1945–46-ம் ஆண்டில் இந்த ஜில்லாவில் மின்சார சக்தியைப் பயன் படுத்திக்கொண்டவர்களின் எண்ணிக்கை 4,570 ஆகும். 1949–50-ஆம் ஆண்டில் இவர்களின் எண்ணிக்கை 12, 828 ஆக உயர்ந்துள்ளது.

இந்த ஜில்லாவில் ஒரு பாகத்திலும், வேலூர், திருப்பத்தூர், வாலாஜா ஆகிய தாலூகாக்களிலும் வேலூர்

எலெக்ட்ரிக் கார்ப்பரேஷனும், கர்னூடிக் எலெக்ட்ரிக் சப்ளை கார்ப்பரேஷனும் மின்சார வினியோகம் செய்கின்றன. இதர பாகங்களில் சர்க்காரே மின்சார சக்தியை வினியோகித்து வருகின்றனர்.

560 பம்பு செட்டுகள் மின்சாரத்தால் இயக்கப்பட்டு வருகின்றன. பம்பு செட்டுகளுக்குரிய உபகரணங்கள் கிடைக்காமையால் சிலர் மின்சார சக்தியின் பயனை அனுபவிக்க இயலாது போயிற்று.

மின்சார வினியோகத் தீவிர அபிவிருத்தியில் இந்த ஜில்லா, சேலம் ஜில்லாவுக்கு அடுத்தபடியில் இருக்கிறது.

குடியாத்தம் தாலூகாவில் சுமார் 2,200 நபர்களுக்கு மின்சார சக்தியை வினியோகித்து வந்த "வட ஆற்காடு ஜில்லா மின்சார சப்ளை கார்ப்பரேஷன்" என்னும் ஸ்தாபனத்தை நமது சர்க்கார் 1950-ம் வருஷம் மார்ச்சு மீ 15உயில் ஏற்று நடத்தி வருகிறார்கள்.

## ரஸ்தாக்கள், பாலங்கள் முதலியன

இந்த ஜில்லாவில், ஜில்லா போர்டுக்குச் சொந்தமான ரோட்டுகள், கட்டிடங்கள் ஆகியவற்றைப் பராமரித்து வருவதுமல்லாமல், சர்க்காருக்கு மாற்றப்பட்ட 659–6–120 மைல் நீளமுள்ள ரஸ்தாக்களையும் "ஹைவேஸ்' இலாகாவினர் அபிவிருத்தி செய்து வருகின்றனர்.



இந்த ஜில்லா ஒரு வியாபார ஸ்தலம். இந்த ஜில்லாவி லிருந்து

இதர ஜில்லாக்களுக்கும், இதர ஜில்லாக்களிலிருந்து இந்த ஜில்லாவுக்கும் வாணிபப் பொருள்கள் பரிமாறப்படுகின்றன. அதனால் இந்த ஜில்லாவில் போக்கு வரத்துக்குரிய ரஸ்தாக்கள் நன்கு சீரமைக்கப்பட்டு வருகின்றன.

1946–47-ம் ஆண்டில் இந்த ஜில்லாவின் ரோட்டு பராமரிப்பு வேலைக்காகவே ரூ. 6,16,028 செலவாயிற்று. விண்ணமங்கலம் கிராஸ் வேஸ் அமைக்கச் செலவான தொகை ரூ. 2,142 ; ரஸ்தாக்களுள் பலவற்றை அகலப் படுத்தும் வேலைக்காக ரூ. 12,911 செலவு செய்யப்பட்டது. அரக்கோணம்—காஞ்சீபுரம் ரோட்டுமைல் 1—9 வரையில் தார் போடுவதற்கு ரூ. 6,311 செலவாயிற்று.

1946–47-ம் வருஷத்தில் வெள்ளத்தால் பாழடைந்த ரஸ்தாக்கள் முதலியவற்றைச் சீரமைக்க 1947–48-ம் ஆண்டில் ரூ. 23,928 செலவழிக்கப்பட்டது. கண்ணமங்கலம் கிராஸ்வே சம்பந்தமாய் ரூ. 4,170 செலவு செய்யப் பட்டது. செய்யாற்றில் விண்ணமங்கலம் கிராஸ்வே நிமித்தம் இது வரையில் செலவழிந்த ரூ. 10,838.

1948–49-ஆம் வருஷத்தில் 6 மைல் 7 பர்லாங்குக்குச் சாலை மரங்கள் வைக்கப்பட்டன. பாலங்கள், கல்வர்ட்டுகள் ஆகியவை சம்பந்தமாய் ரூ. 16,929 செலவழிக்கப் பட்டது.

கடலூர்-சித்தூர் ரோட்டு மைல் 67/1—3-க்குத் தார் போடும் வேலை ஆரம்பித்து வைக்கப்பட்டது. அதற்கான செலவு ரூ. 5,844. கண்ணமங்கலம் கிராஸ்வே வேலை ரூ. 12,982 செலவில் முடிவடைந்துள்ளது. விண்ணமங்கலம் கிராஸ்வே வேலைக்காக பிரஸ்தாப வருஷம் செலவான தொகை ரூ. 10,088.

காட்டுப்பாடி-வெங்கடகிரி கோட்டா ரோட்டு மைல் 24-7-ல் பாலம் ஒன்று அமைக்க ரூ. 2,832 செலவாயிற்று. இப்பாலம் அமைக்கப்படுவதற்குமுன், இந்த ரோட்டுக்குக் குறுக்கே ஓடும் காட்டாற்றினால் மழை காலத்தில் போக்குவரத்து ஸ்தம்பித்து வந்ததால் இப் பால வேலை மேற்கொள்ளப்பட்டது.

N.A.—3

திருப்பத்தூர்-ஆரணி—ஆகிய இவ்விரு முக்கிய வாணிப ஸ்தலங்களைச் சேர்க்கும் ரோட்டில் 8-4 மைலில் கலவை மடுகு ஒன்றுண்டு. இம் மடுகில் தண்ணீர் நிரம்பி வந்தால் போக்கு வரத்து தடைப்பட்டுவிடும். அவ்விதம் தடைப்படுவதை நீக்க, கலவை மடுகின்மீது பாலமொன்று கட்ட வேண்டிய அவசியத்தை ஹைவேஸ் இலாகாவினர் நன்கு உணர்ந்து, இவ் வேலையில் ஈடுபடலாயினர். இப் பாலம் அமைக்கும் வேலை நிமித்தம், ரூ. 2,714 செலவாயிற்று.

புதுச்சேரி-சேலம் ரோட்டு — மைல் 84-4-ல், மொறையாற்றில் வெள்ளம் வந்தாலும், போக்குவரத்து நின்று விடாமல் இருப்பதற்காக அவ்வாற்றின்மீது பாலம் ஒன்று அமைக்கும் தொழில் ஆரம்பித்து வைக்கப்பட்டது.

செய்யாறு கிராஸ்வே பிரஸ்தாப வருஷத்தில் ரூ. 30,433 செலவில் பூராவாகப் பழுது பார்க்கப்பட்டது.

இராணிப்பேட்டை-கிருஷ்ணகிரி ரோட்டு - மைல் 74/6, 76/2 வரையில் ரூ. 6,455 செலவில் தார் போடப்பட்டு அவ் வேலை பூர்த்தியாயிற்று.

இவை தவிர, ரஸ்தாக்களை அகலப்படுத்தும் வேலைகளும் துரிதமாக முடிந்தன.

1949–50-ஆம் ஆண்டில் காட்டுப்பாடி - வெங்கடகிரி கோட்டா-ரோட்டு மைல் 24/7-ல் ரூ. 23,280 செலவில் பாலம் ஒன்று கட்டிப் பூர்த்தியாயிற்று.

பள்ளிகொண்டா - பலமெனேர் ரோட்டு - 0-1—07-ல் சீர்திருத்த வேலை ஆரம்பிக்கப்பட்டது. ஷை. ரோட்டில் மைல் 11/6-7-ல் ஒரு காஸ்வே வேலை துவக்கப்பட்டது.

விண்ணமங்கலம் காஸ்வே வேலை முடிவடையும் தறுவாயில் இருக்கிறது. இதற்குச் செலவழிந்த ரூ. 11,877.

பாலாற்றின் பாலத்தின் மீதுள்ள ரஸ்தாவை, சிமெண்ட்-கான்கிரீட் ரஸ்தாவாக மாற்றும் வேலை ரூ. 8,210 செலவில் முடிவடைந்துள்ளது.

இராணிப்பேட்டை - கிருஷ்ணகிரி ரோட்டு - மைல் 125-2, 3-ல் உள்ள கல்வெர்ட்டுகளை அகலப்படுத்துவதற்காக ரூ. 2,745 செலவு செய்யப்பட்டது.

திருப்பத்தூர் — சிங்காரப்பேட்டை ரோட்டு - மைல் 1/3-ல் உள்ள பாலத்தை அகலப்படுத்தும் வேலை துவக்கப் பட்டது.

அரக்கோணம்—காஞ்சிபுரம் ரோட்டு - மைல் 8/8-ல் ஒரு காஸ்வே கட்டவும், அரக்கோணம் - திருத்தணி ரோட்டு மைல் 3/5-ல் ஒரு பாலம் அமைக்கவும் ஏற்பாடாகி வேலை தொடங்கியுள்ளது.

புரிசை ஏரிகரை டைவர்ஷன் ரோட்டு வேலையும் ஆரம்பிக்கப்பட்டுள்ளது.

சித்தூர்-பெங்களூர் ரோட்டு - மைல் 53-71 வரையில் ஸ்பெஷல் ரிப்பேர் வேலை முடிவடைந்தது.

நடைமுறை வருஷத்தில் இராணிப்பேட்டை—கிருஷ்ணகிரி ரோட்டு-87/2, 100 மைல் வரைக்கும் சிமென்ட்-கான்கிரீட் போடும் வேலை சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்டு நடந்தேறி வருகிறது.

காட்டுப்பாடி-வெங்கடகிரி கோட்டா ரோட்டில் கவுண்டின்ய ஆற்றின்மீது பாலம் ஒன்று கட்டும் திட்டம் அங்கீகரிக்கப்பட்டு, தற்போது ஏற்பட்டுள்ள பணமுடையால் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது.

## சாலைமர வளர்ப்பு

இவற்றுடன் சாலைகளில் மரங்கள் நட்டுப் பயிராக்கும் வேலையும் நடந்து வருகிறது. ஜில்லா போர்டுகளுக்கும், சர்க்காருக்கும் சொந்தமான ரஸ்தாக்களில் உள்ள ஆக்கிரமிப்புகளைத் தடுக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப் பட்டு வருகின்றன.

## போக்குவரத்து மார்க்கங்கள்

இந்த ஜில்லாவில் பல போக்குவரத்து மார்க்கங்கள், பஸ் முதலியவற்றுக்கு அநுகூலமாகப் புதிதாகத் திறந்து வைக்கப்பட்டுள்ளன. அவை பின்வருமாறு :—

வந்தவாசியிலிருந்து அச்சரப்பாக்கத்துக்குப் போகும் மார்க்கம்,

செய்யாற்றிலிருந்து காஞ்சீபுரத்துக்குப் போகும் மார்க்கம்,

ஆற்காட்டிலிருந்து சென்னைக்குப் போகும் மார்க்கம்,

திருவண்ணமலையிலிருந்து திண்டிவனம் வழியாக சென்னைக்குப் போகும் மார்க்கம்,

செங்கத்திலிருந்து திருவண்ணமலைக்குப் போக—மெயில் சர்வீஸ்,

ஆரணியிலிருந்து செய்யாறு, காஞ்சீபுரம் முதலிய ஊர்கள் வழியாகச் சென்னைக்குப் போகும் மார்க்கம்,

ஆற்காட்டிலிருந்து காவேரிப்பாக்கத்தின் வழியாக அரக்கோணத்துக்குப் போகும் மார்க்கம்,

வந்தவாசியிலிருந்து திருவண்ணமலைக்குப் போகும் மார்க்கம்,

காட்டுப்பாடி - துறைப்பாடிக்கும், குடியாத்தம் - வெட்டுவாணத்துக்கும் — ஷட்டில் சேவை புதிதாகத் திறக்கப்பட்டுள்ளது.

## கரும்பு ஆராய்ச்சி நிலையம், குடியாத்தம்

மத்திய ஜில்லாக்களில் உள்ள கரும்பு பயிராகும் பிரதேசங்களுக்கு அநுகூலமளிக்க இந் நிலையம் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது. Co 419, Co 449 ஆகிய உயர்ந்த ரகக் கரும்பு உற்பத்தி இவ் வாராய்ச்சி நிலையத்தின் மூலம் நாடெங்கும் பரவி வருகிறது. இந்த ரகத்தைச் சேர்ந்த கரும்பு சாகுபடி வறட்சி காலத்தில் பாதிக்கப்படுவதில்லை. இக் கரும்பிலிருந்து உற்பத்தி செய்யப்படும் வெல்லம் சிறந்து விளங்குகிறது. உற்பத்தியாகிற வெல்லத்தின் அளவும் அதிகம்.

இத்தகைய கரும்பு சாகுபடிக்கு வெகு ஜாக்கிரதையுடன் 18 நாட்களுக்கு ஒரு முறை நீர்பாய்ச்சவேண்டுமென்றும், கரும்புச் செடிகளைச் சாய விடாமல், நெட்டாரமாய் வளர்ந்து வர அநுகூலங்கள் ஏற்படுத்தவேண்டும் என்றும், அவ்விதம் செய்து வந்தால் நல்ல விளைச்சல் காணுமென்றும் இந் நிலைய ஆராய்ச்சியில் கண்டறியப்பட்டுள்ளது.

கரும்பு முக்கிய வர்த்தகப் பயிராயிருப்பதால் அதைப் பற்றிய ஆராய்ச்சி வேலைகள் இந் நிலையத்தில் நடந்துவருகிறது. ஆனபோதிலும், கரும்பு அறுவடையான பிறகு, அதே நிலங்களில் மாறி மாறி சாகுபடி செய்யப்படும் நெல், கேழ்வரகு, முதலிய உணவுத் தானியங்கள் சம்பந்தமாகவும் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. டிசம்பர், ஜனவரி மாதங்களிலே முன்பாக அறுவடைக்குத் தகுதியாக வளர்ந்து முற்றிப்போகும் கரும்பு ரகங்களை அறுவடை செய்துவிடுவதால் கரும்பு விளைந்த நிலங்களில் அதிகப்படியான நெல், கேழ்வரகு சாகுபடி செய்வது மிகவும் சாத்தியமென ருசுபிக்கப்பட்டிருக்கிறது. குடியாத்தம் பண்ணையில் உற்பத்தியாகிவரும் பசுந்தழை உரங்களைத் தக்க அளவில் அவ்வப்போது உபயோகிப்பதால் நெற் பயிர் இப் பருவ காலத்தில் கூட ஏக்கரா ஒன்றுக்கு இருபது மூட்டை அரிசி விகிதம் சராசரி விளைச்சல் தருகிறது.

இவ்வாராய்ச்சி நிலையத்தில் அபிவிருத்தி செய்யப்பட்ட ரகங்களைச் சேர்ந்த உணவுத் தானியங்களின் சுத்தமான விதைகளின் 300—400 மூட்டைகள் இந்நிலையத்திலிருந்து ஜில்லாவில் ஆங்காங்குள்ள விதைப்பண்ணைகளுக்கு வினியோகிக்கப்படுகின்றன.

## குழாய்க் கிணறு

வட ஆற்காடு ஜில்லா, தக்கோலம் தாலூகா, தக்கோலம் கிராமத்தில் தோண்டிய குழாய்க் கிணற்றில் ஒரு மணி நேரத்துக்குச் சுமார் 15,000 காலன் தண்ணீர் கிடைக்கிறது. இதனால் சற்றேறழத்தாழ 4 ஏக்கர் நிலம் பயனடையும்.

## கிணறு வெட்ட புதிய மான்யத் திட்டம் 1951-52

இப் புதிய திட்டம் இந்த ஜில்லாவில் திருப்பத்தூர், செங்கம் தாலூகாக்கள் நீங்கலாக, ஏனைய தாலூகாக்கள் பூராவும் அமல் நடத்தப்படும்.

இந்த ஜில்லாவில் தோண்டப்பட்ட குழாய்க் கிணறுகளின் புள்ளி விவரங்கள் பின் வருமாறு :—

| வருஷம். | | | தோண்டிய கிணறுகளின் எண்ணிக்கை. |
|---|---|---|---|
| 1947 | ... | ... | 7 |
| 1948 | ... | ... | 3 |
| 1949 | ... | ... | 19 |
| 1950 | ... | ... | 16 |
| மொத்தம் | ... | ... | 45 |

## பிரதேச சோள ஆராய்ச்சி நிலையம்—திருப்பத்தூர்

வட ஆற்காடு ஜில்லா, திருப்பத்தூர் தாலூகா திருப்பத்தூரில் இந் நிலையம் ஸ்தாபிக்கப் பெற்றுள்ளது. 20 ஏக்கர் பூமி ஐந்து வருஷ குத்தகைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. இப் பூமியில் தோட்ட நிலம் 4 ஏக்கர் விஸ்தீர்ணமுள்ளது. எஞ்சியவை புன்செய் நிலம். சோளம், கம்பு, சாமை, வரகு முதலியவை புன்செய் நிலத்திலும், கேழ்வரகு முதலியவை நீர்ப்பாசனம் பெறும் புன்செய் நிலத்திலும் சாகுபடி செய்யப்படுகின்றன. இவற்றின் அபிவிருத்திக்கான ஆராய்ச்சி செய்யவே இந் நிலையம் 1949-ம் ஸ்தாபிக்கப்பட்டது. இவ்வாராய்ச்சியால் ஏற்படும் பலன்கள் இந்த ஜில்லாவுக்கும், சேலம் ஜில்லாவின் சில பாகங்களுக்கும், சித்தூர், செங்கற்பட்டு ஜில்லாக்களுக்கும் விஸ்தரிக்கப்படும். இந் நிலையத்தைச் சேர்ந்த பூமியில் இதுவரையில் இருமுறை ஷை தானியங்கள் சாகுபடி செய்யப்பட்டன. இங்கு விளைந்த சோளம் முதலிய தானியங்களைக் குறித்துப் பலவித ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன.

# கல்வி மறுமலர்ச்சி

---

*இந்த அரசியல் அமைப்புச் சட்டம் அமல் நடக்கத் தொடங்கிய பத்து வருஷ காலத்திற்குள், எல்லாக் குழந்தைகளுக்கும் பதி நான்கு வயது முடியும் வரையில் இலவசக் கட்டாயக் கல்விபோதிக்க அரசாங்கம் முயலும்.*

—இந்திய அரசியல் அமைப்பு.
ஷரத்து—45

கல்வியே கருந்தனம். "எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்." கல்வி கற்றோர் கண்ணுடையவர் ஆவர். கல்வியறிவில்லாதவர் முகத்திரண்டு புண்ணுடையவர் எனக் கருதப்படுவர். நம் நாட்டு மக்கள் பெறும் கல்வியறிவு நம் நாட்டின் நிலைமைக் கேற்றவாறு அமைந்திருக்க வேண்டுமென்பது அவசியமாகும்.

நமது நாட்டுச் சுதந்தரச் சிற்பியாகிய காந்தியடிகள் நாட்டுக்குரிய கல்வி முறையை வகுத்தார். அம்முறையின் சிறப்பை யுணர்ந்த இந்திய மக்கள் அதைப் பின்பற்றி நடக்க முன் வந்துளர். எதிர் காலத்தில் நமது நாடு கல்வித் துறையில் தலையோங்கி நிற்பதில் தடையுமுண்டோ.?

## கல்வி அபிவிருத்தி

நமது ஜன நாயக சர்க்கார், கல்வி சம்பந்தமாய் காந்தியடிகள் வகுத்த திட்டத்தைப் பின்பற்றி நமது நாட்டின் நிலைமைக் கேற்ப கல்வி முறையைச் சீர் திருத்தி அமைத்துள்ளார் ; ஆரம்பக் கல்வியையும் கட்டாயப் படுத்தியிருக்கிறார்கள்.

இந்த ஜில்லாவில் கட்டாயக் கல்வி முறை 1945-ம் ஆண்டில் புகுத்தப்பட்டது. தற்போது கட்டாயக் கல்வி முறையை 236 ஆரம்பப் பாடசாலைகள் மேற்கொண்டுள்ளன. சர்க்கார் நியமித்துள்ள "அட்டென்டென்ஸ்" ஆபீசர்கள், இந்த ஜில்லாவில் பல்வேறிடங்களுக்கும் சென்று அங்குள்ள தாய் தந்தையரைத் தங்கள் பிள்ளைகளைப் பாடசாலைகளுக்கு அனுப்ப வற்புறுத்தி வருகிறார்கள்.

சீர்திருத்தி அமைக்கப்பெற்ற செகண்டரி கல்வி முறைத்திட்டம் 1948-ம் ஆண்டில் தயாரிக்கப்பட்டது. இந்த ஜில்லாவிலுள்ள எல்லா செகண்டரி பாடசாலைகளிலும் இப் புதியமுறை பின்பற்றப்பட்டு வருகிறது. இம்முறைப்படி கைத்தொழிலும், விளையாட்டுக்களும் சிறுவர்களுக்குப் போதிக்கப்படுகின்றன. தாய் மொழிக்கும், பிரதேச மொழிக்கும் முதலிடம் அளிக்கப்பட்டுள்ளது. அதற்கு அடுத்தபடியாக, இங்கிலீஷ் மொழி கற்பிக்கப்படுகிறது. தேசிய மொழியாகிய இந்தி இஷ்டபாடமாக வைக்கப்பட்டுள்ளது. இப் பாடசாலைகளில் மாணவ மாணவிகளுக்குப் பிரஜா பயிற்சியும் அளிக்கப்பட்டு வருகிறது. அதுவுமல்லாமல், சமூக சம்பந்தமான பாடங்கள் பொது அறிவுக்குப் பதிலாகக் கற்பிக்கப்படுகின்றன.

## அடிப்படைக் கல்வி

இக்கல்வி முறையில் ஆசிரியர்களுக்குப் பயிற்சியளிக்கும் பொருட்டு இந்த ஜில்லாவிலுள்ள இரண்டு சர்க்கார் பயிற்சிப் பாடசாலைகள் அடிப்படைக் கல்விப் பயிற்சி சாலைகளாக மாற்றப்பட்டுள்ளன.

அடிப்படைக் கல்வி முறையைப் புகுத்தியதால் இங்கு 1949-50-ம் ஆண்டில் 21 ஆரம்பப் பாடசாலைகளும், 1950-51-ம் ஆண்டில் 26 ஆரம்பப் பாடசாலைகளும் அடிப்படைக் கல்விப் பாடசாலைகளாக மாறிவிட்டன. கூடுமான வரையில் இவ்வடிப்படைக் கல்விப் பாடசாலைகளில் அடிப்படைக் கல்விப் பயிற்சி பெற்ற ஆசிரியர்களே நியமிக்கப்பட்டுள்ளார்கள்.



காட்சி மூலம் கல்வி போதிக்கும் முறை இந்த ஜில்லாவில் எல்லா செகண்டரி பாடசாலைகளிலும் நடை பெற்று வருகிறது. கல்வியறிவு அளிக்கக்கூடியவையும், சர்க்கார் அங்கீகாரம் பெற்றவையுமான சில சலனப் படங்கள் மூலம், சிறுவர் சிறுமியர்களுக்குக் கல்வி போதிக்கப்படுகிறது. மாணவ, மாணவிகள் காதாற் கேட்டுப் பயன் பெறுவதற்காக வானொலி மூலம் சில பாடங்கள் தயாரிக்கப்படுகின்றன.

செகண்டரி பாடசாலைகளில் வாசிக்கும் மாணவ, மாணவிகளுக்குத் தொழில் நுணுக்கக் கல்வியும் 'செக்ரிடேரியல்' கல்வியும் சில செகண்டரி பாடசாலைகளில் போதிக்கப்படுகின்றன.

சென்ற இரண்டு வருஷ காலமாக வேலூரிலுள்ள ஊர்ஹிஸ் உயர்தரப் பாடசாலையில் "செக்ரிடேரியல்" முறைக்கல்வியும், ஆம்பூரிலுள்ள ஹிந்து உயர்தரப் பாடசாலையில் விவசாய பாடக் கல்வி முறையும் போதிக்கப்பட்டுவருகின்றன.

### மூத்தோர் கல்வி

மூத்தோருக்குக் கல்வி கற்பிக்கும் முறையில் ஆசிரியர்களுக்குப் பயிற்சியளிப்பதற்காக 1948-ம் ஆண்டில் ஒரு விசேஷ பயிற்சிப் பாடசாலை செய்யாற்றில் திறந்து வைக்கப்பட்டுள்ளது. ஸ்தல ஸ்தாபனங்கள், மான்யம் பெறும் ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் மேற்பார்வையில் செகண்டரி, ஹையர் எலிமெண்டரி பாடசாலைகளும் 15 சமூகக் கல்வி நிலையங்களும், கல்வி போதித்து வருகின்றன. அவையல்லாமல், மூத்தோருக்கு எழுத்தறிவிப்பதற்காக 29 பாடசாலைகள் திறந்துவைக்கப்பட்டுள்ளன.

### நூல் நிலைய சேவை

கல்வியறிவு அபிவிருத்தியடைவதற்கு நூல் நிலையங்கள் பெரிதும் துணைபுரிகின்றன. அதனால் ஸ்தல ஸ்தாபனங்களும், முனிசிபாலிடிகளும், பஞ்சாயத்து போர்டுகளும், கிராம சங்கங்களும், ஏனைய தனிப்பட்ட ஸ்தாபனங்களும் திறந்துவைத்து நடத்திவரும் நூல் நிலையங்களின் பரிபாலனத்துக்கு நமது ராஜ்ய சர்க்கார் வழங்கும் மான்யத்தொகை வினியோகிக்கப்படுகிறது. இந்த ஜில்லாவில் இதுவரையில் 91 நூல் நிலையங்கள் சர்க்கார் மான்யம் வழங்கப்பெற்று வருகின்றன.

1948-ம்வருஷத்திய சென்னை பொது ஜன நூல் நிலைய சட்டமும், விதிகளும் 1950-ம்வருஷ ஏப்ரல்மீ 1ஆ அமலுக்கு வந்தன. சென்னை ராஜ்யத்தில் மக்கள் அனைவருக்கும் கல்விபோதிக்க வேண்டுமென்னும் இயக்கத்துக்கு அநுகூலமாக நூல் நிலைய சேவை திட்டத்தை அபிவிருத்தி செய்வதே இச் சட்டத்தின் நோக்கமாகும்.

### புதிய கல்லூரியும், பாடசாலைகளும்

சர்க்கார் மான்ய உதவியால் வேலூரில் மாதர்களுக்கு மிஷனரி வைத்தியக் கல்லூரி நிறுவப்பட்டது. நமது ராஜ்ய சர்க்கார் பதவி ஏற்றபின் காட்டுப்பாடி, பள்ளிகொண்டா, களம்பூர், கண்ணமங்கலம், கலவை, நாட்டாம்

பள்ளி, ராணிப்பேட்டை, திமிரி, தேசூர், பெரணமல்லூர் முதலிய இடங்களில் ஸ்தல ஸ்தாபன செகண்டரி பாடசாலைகள் நிறுவப்பட்டன. பஞ்சாயத்து போர்டார் அரக்கோணத்தில் ஒரு செகண்டரி பாடசாலை திறந்துவைத்தனர். நெல்லூர்ப் பேட்டையிலும், குடியாத்தத்திலும் இரண்டு முனிசிபல் செகண்டரி பாடசாலைகள் சிறுவர்களுக்காகவும், திருவண்ணாமலையில் ஒரு முனிசிபல் பாடசாலை சிறுமியர்களுக்காகவும் நிறுவப்பட்டன.

சிறுமியர்களுக்காக ஒரு செகண்டரி பாடசாலை திருப்பத்தூரிலும், ஸெயின்ட் ஜோஸப் செகண்டரி பாடசாலை ஆரணியிலும் நிறுவப்பட்டுள்ளன. இவ்விரண்டு பாடசாலைகளுக்கும் சர்க்கார் மான்யம் வழங்குகிறார்கள்.

அனாதைச் சிறுவர், சிறுமியருக்காக சர்க்கார் மான்யம் பெற்று ஆற்காட்டில் ஸ்ரீ திருவள்ளுவர் ஹிந்து ஆர்பனேஜும், திருப்பத்தூரில் ஸெயின்ட் மேரிஸ் இம்மாக்குலேட் ஆர்பனேஜும், திறக்கப்பட்டன. 30 மூத்தோர் கல்விப் பாடசாலைகள் இந்த ஜில்லாவில் இருக்கின்றன.

நமது சர்க்கார் பதவி ஏற்றபோது இந்த ஜில்லாவில் 1,610 ஆரம்பப் பாடசாலைகள் இருந்தன. அவற்றில் 1·22 லட்சம் மாணவ, மாணவிகள் கல்வி பயின்றனர். இப்போதுள்ள ஆரம்பப் பாடசாலைகளின் எண்ணிக்கை 1,660 ஆகும். இப்பாடசாலைகளில் 1·91 லட்சம் மாணவ மாணவிகள் வாசித்து வருகின்றனர்.

ஒவ்வொரு செகண்டரி பாடசாலைக்கும் 5 முதல் 10 ஏக்கர் நிலம் ஆர்ஜிதம் செய்யப்பட்டு, விளையாடுமிடமாக உபயோகமாகிறது. கூடுமான வரையில் செகண்டரி பாடசாலைக் கட்டிடங்களை விஸ்தரிப்பதற்கு இது வரையில் ரூ. 2,61,368 செலவாயிருக்கிறது. சில பாடசாலைகளின் விஸ்தரிப்புக்காகப் புதிய கட்டிடங்கள் எழுப்பப் பொதுமக்களுக்கு வேண்டுகோள் விடப்பட்டது. பொதுமக்கள் எழுப்பிய கட்டிடங்களில் ஆரணியிலுள்ள ஸ்தல ஸ்தாபன உயர்தரப் பாடசாலையைச் சேர்ந்த "ரிபப்ளிக் பிளாக்" (The Republic Block) முக்கியமானது.

# பொது சுகாதாரம்

மக்களின் போஷாக்கு, வாழ்க்கைத்தரம் முதலியவற்றை உயர்த்தி, பொது ஜன சுகா தாரத்தை அபிவிருத்தி செய்வதை, அரசாங் கம் தனது முதன்மையான கடமைகளுள் ஒன்ருகக் கருதும்.

—இந்திய அரசியல் அமைப்பு,
ஷரத்து—47.

உலக இன்ப நுகர்ச்சிக்கு நம்முடல் உரம் பெற்றிருக்க வேண்டும். நோய் நம்மை அணுகவிடலாகாது. 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்பதை எவர் மறுத்துரைக்கக்கூடும். நோய், நொடிகளின்றி வாழும் மக்களை உடைய நாட்டை நாம் சுவர்க்க பூமிக்கு ஒப்பிட லாம். பிணிகளை நாட்டைவிட்டு அகற்றுவதே நாம் சுதந் திரம் பெற்றதன் முக்கிய பயன்.

உணவு, உடை, இல்லிடம் முதலியவற்றைப்போல் தேக சுகமும், மக்கள் இனப் பாதுகாப்புக்கும் முன் னேற்றத்துக்கும் இன்றியமையாத தொன்ருகும். ஆங்கில அரசியலாளர் பொது ஜன சுகாதார அபி விருத்திக்கானவற்றைத் தம்மால் இயன்ற வரையில்

செய்துவந்தார்கள். சென்னை ராஜ்யத் தலைநகரிலும், ஜில்லாக்களின் முக்கிய பட்டணங்களிலும் நோய் நிவாரண வசதிகள் ஏற்படுத்தப்பட்டன. ஆங்கிலேயர் எங்கெங்கு வசித்து வந்தார்களோ அங்கெல்லாம் வைத்திய சாலைகள் ஏற்பட்டன ; அநேக டாக்டர்களும் வசித்து வந்தார்கள்.

### நாடெங்கும் வைத்திய வசதிகள்

ஆங்கில ஆட்சி இறுதியில், இந்தியாவெங்கும், கிராமப் பிரதேசங்கள் உள்பட, வைத்திய வசதிகளை அபிவிருத்தி செய்ய திட்டங்கள் வகுக்கப்பட்டன.

நாம் சுதந்திரம் அடைந்து நமது நாட்டில் ஜனநாயக சர்க்கார் ஏற்பட்ட பிறகு, நாடெங்கும் பொது ஜன சுகாதாரம் முக்கியத்துவம் பெற்றது. நமது ராஜ்யத்தில் பணமுடை ஏற்பட்டிருந்த போதிலும், வைத்திய நிபுணர்களின் எண்ணிக்கையும், நவீன மருந்து வகைகளும், ஆயுதங்களும் குறைந்திருந்த போதிலும் சர்க்கார் கொஞ்சம் கொஞ்சமாகத் தங்கள் சுகாதாரக் கொள்கையை சென்னை ராஜ்யமெங்கும் பரப்பலாயினர் ; ஆயுர்வேதம், யூனானி முதலிய இந்திய வைத்திய முறைகளைச் சாஸ்திரோக்தமாய் அபிவிருத்தி செய்யலாயினர்.

முதன் முதலாக, டாக்டர்கள், நர்சுகள், இதர வைத்திய சிப்பந்திகளின் எண்ணிக்கையை அதிகப்படுத்தி அவர்களுக்கு நல்ல பயிற்சியளிக்கும் வேலை மேற்கொள்ளப்பட்டது. ஆங்காங்கு வைத்தியக் கல்லூரிகள் நிறுவ திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. பிரசவத்துக்கான மருத்துவ மாதர்கள் பலர் பயிற்சி பெற்று வருகின்றனர்.

நமது சர்க்கார் சென்னை ராஜ்ய ஜில்லாக்களிலும் தாலூகாக்களிலும் ஏற்கெனவே இருந்துவரும் ஆஸ்பத்திரிகளைப் பழுதுபார்க்கவும், விஸ்தரிக்கவும், புதுப்பிக்கவும் ஏற்பாடு செய்துள்ளார்கள்.

கிராமப் பிரதேசங்களில் பிரதம சுகாதார நிலையங்களை நிறுவி, கிராம மக்களுக்கு வைத்திய வசதியளிக்க திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. மக்களுக்கு நேரும்

சொற்ப வியாதிகளை அவ்வப்போது நிவர்த்திக்க கிராம வைத்தியர்களுக்குப் பயிற்சியளிக்கவேண்டுமென்பது அத்திட்டத்தின் ஒரு பகுதியாகும். மக்கள் இலவச வைத்திய உதவி பெறுவதற்கு அனுகூலமாக நமது சர்க்கார் ரூபா நூற்றுக்குக் குறைந்து ஊதியம் பெறுவோர் வைத்தியக் கட்டணம் ஒன்றும் செலுத்தவேண்டியதில்லை என்று உத்தரவிட்டுள்ளார்கள்.

நோய் நிவாரணத்துக்கான வசதிகளை சர்க்காரே செய்து வைப்பது கூடாத காரியமாதலால் வள்ளன்மை வாய்ந்த பெருமக்கள், ஆஸ்பத்திரிகளை விஸ்தரிக்கவும் அபிவிருத்தி செய்யவும், படுக்கைகளின் எண்ணிக்கையை அதிகப்படுத்தவும், மருந்துவகைகளும், நூதன கருவிகளும் வாங்கவும் பணவுதவி செய்ய முன் வந்துள்ளனர்.

## குடிதண்ணீர் பாதுகாப்பு

இந்த ராஜ்யத்தில் அநேக இடங்களில் குடி தண்ணீர் பாதுகாக்கப்படாமல் இருப்பதால் மக்கள் நோயால் பீடிக்கப்படுகின்றனர். அதைத் தடுக்க நமது சர்க்கார் ஐந்து வருஷத் திட்டமொன்று வகுத்து ராஜ்ய மெங்கும், நகரங்களிலும் கிராமங்களிலும் குடிதண்ணீர் பாதுகாப்புக்காக ஏற்பாடு செய்ய சர்க்கார் ஸ்தல ஸ்தாபனங்களுக்குத் தாராளமாய் மான்யம் வழங்குவதாய் வாக்குறுதி தந்துள்ளார்கள்.

## தடுப்புமுறைகள்

கொள்ளை நோய்கள் மக்களைப் பீடிக்காமல் இருப்பதற்கு ஊசி குத்துதல், நோய்க் கிருமிகளைக் கொல்லும் மருந்து வகைகளைத் தெளித்தல் முதலிய தடுப்புமுறைகளைச் சர்க்கார் கையாளத் தொடங்கியுள்ளார்கள். மக்கள் வசிக்குமிடங்களைச் சுத்தமாய் வைத்துக்கொள்ளவும், வற்புறுத்தப்படுகிறார்கள். கலப்பட உணவுப் பொருள்கள் விற்பனை செய்வது தடுக்கப்படுகிறது. ஹோட்டல்கள் முதலிய சாப்பிடும் இடங்கள் சுகாதாரத்துக்கு

அனுகூலமாய் இருக்கவேண்டு மென்றும் சர்க்கார் உத்திரவு இட்டுள்ளார்கள்.

க்ஷயரோகம், குஷ்டரோகம், மேகவியாதிகள் ஆகிய வியாதிகளைப் பரவாமல் தடுத்துக் கட்டுப்படுத்துவதற்கான வழிவகைகளையும் சர்க்கார் கையாளத் தொடங்கியுள்ளனர். ஆங்காங்கு, குஷ்டரோக நிவாரண நிலையங்கள் ஏற்படுத்தி, அவ் வியாதியின் மூல காரணங்களைக் கண்டறிந்து அவற்றுக்கான சிகிச்சை செய்யவும், தொத்திக்கொள்ளும் தன்மை வாய்ந்த குஷ்டரோக வியாதியால் பீடிக்கப்பட்டிருப்போரைத் தனித்து வாழ்க்கை நடத்துவிக்கவும், அல்லது தனி இடங்களில் தங்க வைக்கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

ஒவ்வொரு ஜில்லாவிலும், க்ஷயரோகிகளுக்குச் சுகாதார நிலையம் நிறுவ சர்க்கார் உத்தேசித்திருக்கிறார்கள். தனிப்பட்ட ஸ்தாபனங்கள் க்ஷயரோகிகளுக்கு அநேக சுகாதார நிலயங்களை அமைத்துள்ளன. அவற்றில் சிலவற்றுக்குச் சர்க்கார் பணவுதவியும் செய்திருக்கிறார்கள்.

சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் மேக வியாதியஸ்தர்களும் சிகிச்சைபெற்று வருகிறார்கள்.

இந்த ஜில்லாவில், நோய்க் கிருமிகள் மண்ணில் உற்பத்தியாவதைத் தடுக்க, கிராமங்களில் நவீன முறையில் கக்கூஸ் அமைத்து அதில் மக்கள் மலம், ஜலம் கழிப்பதைச் சுகாதார இலாகாவினர் வற்புறுத்தி வருகின்றனர். இம்மாதிரியான கக்கூஸ்கள் சினிமாக் கொட்டகைகளில் கட்டப்பட வேண்டுமென்று சர்க்கார் கட்டாயப்படுத்தி வருகிறார்கள்.

## பிரசவ, சிசு சம்ரக்ஷண நிலையங்கள்

இந்த ஜில்லாவில் அநேக பாகங்களில் 15 பிரசவ - சிசு சம்ரக்ஷண நிலையங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவைகளை ஸ்தல ஸ்தாபனத்தார் பரிபாலித்து வருகிறார்கள். 1950-ம் வருஷம் ஜனவரி மாதத்தில் ஸ்திரீ யொருவர் முதல் கிரேட் வைத்திய அதிகாரியாக நியமிக்கப்பட்ட

பின் இந் நிலையங்கள் சிரத்தையுடன் கண்காணிக்கப்பட்டு வருகின்றன.

செங்கம், திருப்பத்தூர் தாலூகாக்களுக்கு அருகில் ஜவ்வாது மலைப் பிரதேசத்திலுள்ள கிராமவாசிகள் முறைக் காய்ச்சலால் பெரிதும் பீடிக்கப்பட்டு வருகின்றனர். அவ் வியாதியைக் கட்டுப்படுத்த சுகாதார அதிகாரி ஒருவரும் அவருக்கு உதவியாக பல சிப்பந்திகளும் நியமிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் சேவையின் மூலம் மக்கள் பெரும் பயன் அடைந்துள்ளார்கள். முறைக் காய்ச்சலும் கட்டுப்பட்டுவருகிறது.

## பிரதம சுகாதார நிலையங்கள்

இது வரையில் இந்த ஜில்லாவில் 6 பிரதம சுகாதார நிலையங்கள் நிறுவப்பட்டுள்ளன. இந் நிலையங்கள் மூலம் 99,859 ஜனத்தொகை கொண்ட 86 கிராமங்கள் பெரும் பயன் அடைந்துள்ளன. இந் நிலையங்களில் ஊசி குத்துதல், கொள்ளை நோய்களைக் கட்டுப்படுத்தல், குஷ்டரோகிகளைப் பரிசோதித்தல், குடி தண்ணீர் சப்ளை சம்பந்தமாய் வழிவகை செய்தல், பிரசவ, சிசு சம்ரக்ஷண நிலையங்களைக் கண்காணித்தல் முதலிய சேவைகள் நடந்தேறிவருகின்றன.

1946-ம் ஆண்டு ஜனவரி மாதம் 26உ, குடியாத்தத்திலுள்ள சர்க்கார் ஆஸ்பத்திரியில் பிரசவ வார்டு ஒன்று கட்டுவதற்காக ஸ்ரீ பி. எ. கங்காதர முதலியார் இனாமாக வழங்கிய ரூ. 10,000த்தை நமது சர்க்கார் ஏற்றுக்கொண்டனர்.

1950-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 14உ, வேலூரிலுள்ள சர்க்கார் பெண்ட்லண்ட் ஆஸ்பத்திரியில் 25 புருஷருக்கும், 25 மாதருக்குமாக 50 படுக்கைகள் அமைப்பதற்கு இரண்டு கட்டிடங்கள் கட்ட நமது சர்க்கார் ரூ. 7,400 அனுமதித்துள்ளார்கள்.

## வேலூரில் கோட்டையும், கோயிலும்



கோட்டையின் வெளிப்புறக் காட்சி



கோயில் கலியாண மண்டபம்



சிற்பத்தின் சிறப்பு



கண்கவரும் சிற்பக்கலை



# கிராமச் சீரமைப்பு

*இந்தியாவின் ஜீவன் அதனுடைய ஏழு லட்சம் கிராமங்களில்தான் இருக்கிறது; என்று இந்தக் கிராமங்கள் அனைத்தும் பிறர் கையை எதிர் பாராமல் தம்முடைய தேவையைத் தாமே பூர்த்தி செய்து கொள்ளும் சக்தியும் தகுதியும் பெறுகின்றனவோ, அன்றுதான், இந் நாடு பூரண சுதந்திரம் பெற்ற நாடாக முடியும்.*

—காந்தியடிகள்.

நமது கிராமங்கள் நலமடைந்தால் நமது நாடும் நலம் பெற்று விளங்கும் என்பது காந்தியடிகள் கண்ட கனவாகும். அதற்கேற்ப அவர் கிராம நல அபிவிருத்தித் திட்டம் ஒன்று வகுத்தார். அத்திட்டத்தை நமது நாட்டு மக்கள் இப்போது பின்பற்றத் தொடங்கியுள்ளார்கள். அதனுல் அவ்வுத்தம வீரர் கண்ட கனவு நனவாகும் நாள் நெடுந்தூரத்தில் இல்லை.

கிராமங்களே ஒரு நாட்டின் உயிர் நிலை. கிராமங்களும் கிராம மக்களும் சுபிட்சமாயிருப்பின் அந்நாடும் சுபிட்சமாயிருக்கும். இது சரித்திரவாயிலாக அறிந்த உண்மை.

N.A—4

பண்டைக்காலத்தில் நமது நாடும், நாட்டு மக்களும் ஒரு குறைவுமின்றி வாழ்ந்து வந்தார்கள். அதற்குக் காரணம், அக்காலத்தில் இந்தியாவிலிருந்த கிராமங்களனைத்தும் சீரும் சிறப்பும் பெற்று விளங்கின. அந்நிய ஆட்சியால் கிராம வாழ்வு சிதைந்தது. அதனால் நமது நாடு சமூக, பொருளாதாரத் துறைகளில் சீர்கேடுற்று வீழ்நிலையடைந்தது. உலகிலுள்ள ஏனைய நாடுகளைப்போல் நமது நாடும் முன்னேற்றமடைய இந்நாட்டிலுள்ள கிராமங்கள் சீரமைக்கப்படவேண்டும்.

## கிராம நல அபிவிருத்தி

இதைக் கருத்துட்கொண்டு நமது காந்தியடிகள் தாம் வகுத்த நிர்மாணத் திட்டங்களுள், கிராம நல அபிவிருத்திக்கு முதன்மை அளித்தார். நமது ராஜ்ய சர்க்கார் அவரைப் பின்பற்றி சென்னை ராஜ்யமெங்கும் ஒவ்வொரு ஜில்லாவிலும் கிராமங்களைச் சீரமைப்பதில் நோக்கங்கொண்டுள்ளார். ஒரே காலத்தில் எல்லாக் கிராமங்களையும் சீரமைக்கமுடியாது. அதனால் அவர்கள் ஒவ்வொரு ஜில்லாவிலும் சில பிர்க்காக்களைத் தேர்ந்து எடுத்து அப்பிர்க்காக்களில் உள்ள கிராமங்களை எல்லாத்துறைகளிலும் முன்னேற்றமடைவிக்கத் தலைப்பட்டுள்ளார்கள்.

இந்த ஜில்லாவில் நமது சர்க்கார் முதன் முதலாக, போளூர் தாலூகாவிலுள்ள கலசபாக்கத்தைத் தேர்ந்தெடுத்தார்கள். அதன் பிறகு, அதே தாலூகாவிலுள்ள கடலாடியையும், திருவண்ணாமலை தாலூகாவைச்சேர்ந்த துரிஞ்சாபுரத்தையும் சேர்த்துக் கொண்டார்கள்.

இம்மூன்று பிர்க்காக்களின் ஆக்க வேலைகளைக் கவனிக்க ஒவ்வொரு பிர்க்காவுக்கும் பிர்க்கா அதிகாரி ஒருவர் உண்டு. அவருக்கு ஒத்தாசையாய் இருந்து அபிவிருத்தித் திட்டங்களை வெற்றிகரமாக நிறைவேற்றிவைக்க ஒரு சூபர்வைசர், ஒரு அலுவல் குமாஸ்தா, காதி வேலையில் ஈடுபடுபவர் ஒருவர், ஒரு நூல் நிலைய மேற்பார்வையாளர், புத்தக விநியோக சிப்பந்தி ஒருவர், நில கண்காணிப்பாளர்

ஒருவர் ஆக அறுவர் நியமிக்கப்பட்டுள்ளனர். இதர வேலைகளைச் சரிவரச் செய்வதற்குக் கிராம நிர்மாண ஊழியர்கள் பதின்மரும் நியமிக்கப்பட்டுள்ளனர்.

இம்மூன்று பிர்க்காக்களிலும் உள்ள கிராமங்களில் பின்வரும் ஆக்கவேலைகள் நடைபெற்றுவருகின்றன :—

(1) விவசாயச் சீர்திருத்தம், (2) கைத்தொழில் முன்னேற்றம், (3) கதர் அபிவிருத்தி, (4) சுகாதாரம், வைத்தியம், (5) கிராமக் கல்வி, (6) பொது ஸ்தாபன அமைப்பு, (7) சாலைகள் அமைத்தல், (8) கிணறுகள் தோண்டல், பழுது பார்த்தல், (9) ரேடியோ செட்டுகள் அமைத்தல், (10) போர்டு கூட்டங்கள் நடத்தல்.

## உரம் விதை வினியோகம்

விவசாயச் சீர்திருத்தம் சம்பந்தமாய் ஆங்காங்கு மாதிரிப் பண்ணைகள் அமைக்கப்பட்டுள்ளன. நிலவளங்களைப் பெருக்கி, நீர்ப்பாசனத்துக்கான ஏற்பாடுகள் செய்து, பயிர் மிகச் செழிக்க வழிவகைகள் கோலப்பட்டுள்ளன. நவீன முறையில் விவசாயக் கருவிகளும், தண்ணீர் இறைக்கும் யந்திரங்களும், நிலங்களைப் பண்படுத்தும் டிராக்டர், புல் டோஸர் முதலிய சாதனங்களும் உபயோகிக்கப்பட்டுவருகின்றன. கரம்பு நிலங்கள் செம்மையாக்கப்படுகின்றன. கால்நடைகள் அபிவிருத்திக்கு ஆவன நிறைவேற்றி வைக்கப்படுகின்றன.

அந்தந்தக் கிராமத்திலுள்ள மக்களுக்குத் தேவையான உரம், விதை, கால்நடைகளுக்குத் தேவையான தீவனம் முதலியன உற்பத்தி செய்யப்பட வேண்டும். உற்பத்திப் பொருள்கள், நெல் முதலிய தானிய வகைகள் முதலியவற்றைப் பெருக்கவேண்டும்.

கறவைப் பசுக்களை வளர்த்து, பால், தயிர், மோர், வெண்ணெய் முதலியவற்றை அதிகமாகப் பெறவேண்டும். உயர்ந்த ரகக் கோழிகளை வளர்த்து, முட்டைகளை அதிகரிக்கவேண்டும். வீடுகளிலும், வயல்களிலும் தேனீக்களை வளர்த்துத் தேன் சேகரிக்கவேண்டும். எண்ணெய்

ஆட்டுதல், சோப்பு, காகிதம் முதலியவை செய்தல் மாவரைத்தல் ஆகிய கைத்தொழில்கள் விருத்தியாக வேண்டும்.

விவசாய விருத்திக்கு உரங்கள் அவசியமாகும். கிராமங்களில் ஆங்காங்கு இயற்கை, செயற்கை உரங்கள் சேகரித்து நிலங்களுக்கு இட்டு அவற்றை வளப்படுத்த வேண்டும். உயர்ந்த ரகப் பொறுக்கு விதைகள் தயாரிக்க வேண்டும். நீர்ப்பாசன வசதிகளை விஸ்தரிக்கவேண்டும். நிலங்களுக்கு நீர் இறைக்கவும், எண்ணெய்ச் செக்குகளை இயக்கவும், உப தொழில்களை நிறைவேற்றவும் மின்சார சக்தியை உற்பத்தி செய்யவேண்டும். மேற்கூறிய முறைகள் வெற்றிகரமாகக் கையாளப்படின் நமது ராஜ்யத்திலுள்ள ஒவ்வொரு கிராமமும் சுயதேவை பூர்த்தியடைவதுமன்றி, பட்டணவாசிகளுக்கும், அயல் நாடுகளுக்கும் போதுமான பொருள்களை ஏற்றுமதியும் செய்யலாம்.

### சர்க்காரின் சாதனைகள்

மேற்கூறிய துறைகளில் நமது சர்க்காரின் சாதனைகள் பிர்க்காவாரி கீழே தரப்பட்டுள்ளன :

மூன்று பிர்க்காக்களிலும் இதுவரையில் 1,500 எருக்குழிகள் தயாரிக்கப்பட்டுள்ளன. ஆனைவாடி போன்ற பல கிராமங்களில் பொறுக்கு விதைகள் இட்டுப் பயிர்கள் செழித்து வளர்ந்து நல்ல பலன் அளித்துள்ளன. இவ் விதைகளின் உபயோகத்தால் உணவுத் தானியங்கள் $1\frac{1}{2}$ மடங்கு பெருகியுள்ளன. கலசபாக்கத்திலுள்ள P.W.D. ஏரி ஆழப்படுத்தப்பட்டது. இன்னும் பல P.W.D. ஏரிகள் பழுது பார்க்கப்பட்டன. பில்லூர் ஏரிக்குச் சேயாற்றிலிருந்து ஒரு கிளைக் கால்வாய் வெட்டப்பட்டது. இன்னும் பூண்டி, சாலூர் சோழவரம் ஏரிகளுக்குச் சேயாற்றினின்றும் புதிய கால்வாய்கள் வெட்டுதற்குத் திட்டமிடப்பட்டுள்ளது. இதுவரையில் கலசப்பாக்கம் பிர்க்காவில் ஆறு கிராமங்களில் மின்சார வசதி மூலம் வயல்களுக்குத் தண்ணீர் இறைக்கப்படுகிறது. இந்த பிர்க்காவிலுள்ள

இதர கிராமங்களுக்கும் மின்சார வசதியளிக்க வகைசெய்யப்பட்டுள்ளது. பல கிராமங்களில் நவீன முறைப்படி விவசாயக் கருவிகள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

## கால்நடை அபிவிருத்தி

ஸ்தலஸ்தாபனங்கள், கூட்டுறவு சங்கங்கள் ஆகியவற்றின்மூலம் கிராமங்களுக்குப் பொலி காளைகள் வினியோகிக்கப்பட்டுவருவதால் நாளடைவில் உயர்ந்த ரக கால்நடைக்ளை நமது நாட்டில் உற்பத்திசெய்ய ஹேது உண்டாகும். கீழ்த்தரமான கால்நடைகள் குறைந்தே போகும். கல்சப்பாக்கத்தில் பஞ்சாயத்து போர்டின் பராமரிப்பின் கீழ் ஒருகாங்கேய பொலி காளை இருந்து வருகிறது. இதற்கு மாதந்தோறும் தீவனச் செலவு ரூ. 58-க்குக் குறைவதில்லை. இதன் மூலம் இதுவரையில் 22 உயர்ந்த ரகக் கன்றுகள் உற்பத்தியாயின. கலசப்பாக்கம், கடலாடி பிர்க்காக்களுக்குமட்டும் கூட்டுறவு சங்கங்கள்மூலம் 5 பொலி காளைகளை வினியோகிக்க ரூ. 1,000 வசூலிக்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

வருஷந்தோறும் கால் நடைகளின் அபிவிருத்தியை முன்னிட்டுக் கால்நடைக் காட்சிகள் நடைபெற்றுவருகின்றன. இக்காட்சியில் கால்நடைகளை நல்ல முறையில் பரிபாலித்து வரும் விவசாயிகளுக்கு, விவசாயக் கருவிகள் இனாமாக வழங்கப்படுகின்றன. இவ்வாறு கால் நடைக் கண்காட்சிகளில் பரிசில் வழங்குவதற்கு நமது சர்க்கார் வருஷந்தோறும் ரூ. 200 உதவிபுரிந்து வருகிறார்கள்.

## கைத்தொழில்

கிராம மக்கள் விவசாயத்தையே முக்கிய தொழிலாகக் கொண்டு, ஏனைய கைத்தொழில்களைப் புறக்கணிக்கிறார்கள். விவசாயத்தால் அவர்கள் பெறும் ஊதியம் வெகு சொற்பம்; அதைக்கொண்டு அவர்கள் கவலையின்றி வாழ்க்கை நடத்துவது கடினமே. அதனால் அவர்கள் விவசாயத்துடன் இதர கைத்தொழில்களில் பயிற்சி பெறுவது அவசியமாயிருக்

கிறது. தச்சுவேலை, கருமாரவேலை முதலிய கைத்தொழில்களில் கிராம மாணவர் பயிற்சிபெறுகிறார்கள். மேலாரணியிலும், காப்பலூரிலும் இத் தொழில்களில் 60 மாணவர்கள் பயிற்சிபெற்றார்கள். இப்பயிற்சியின் பொருட்டு அம்மாணவர்கள் உபகாரச் சம்பளம் பெற்றனர். இதற்காகச் செலவிடப்பட்ட ரூ. 6,000-ல், ரூ. 3,000 பொது மக்களிடமிருந்து வசூலிக்கப்பட்டது; எஞ்சிய ரூ. 3,000 சர்க்கார் வழங்கினர்.

இம்மூன்று பிர்க்காக்களிலுள்ள கிராம விவசாயிகளுக்கு ஏற்றச்சால், கவலைச்சால், இறைப்புத்தோண்டி முதலிய சாமான்களை உற்பத்திசெய்து குறைந்த விலைக்கு விற்பதற்காக காப்பலூரில் ஒரு தொழிற்சாலை நிறுவப்பட்டுள்ளது.

கைத்தொழில் முன்னேற்றம் அடைய வேண்டுமென்பதற்காக பிர்க்காக்களில் உள்ள 50 கிராமங்களில் தச்சுவேலை, தோல் வேலை முதலிய கைத்தொழில்களில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களில் 10 பேருக்குச் சுமார் ரூ. 500 பெறுமானமுள்ள நவீனக் கருவிகள் வழங்கப்பட்டன. இப் பிர்க்காக்களைச் சேர்ந்த கிராமங்களிலுள்ள ஏனைய தொழிலாளர்களில் சிலருக்கும் நவீன கருவிகள் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.



## குடிசைத் தொழில்கள்

விவசாயிகள் விவசாயத்தைத் தவிர, கோழிவளர்த்தல், பாய் முடைதல், தேனீ வளர்த்தல் முதலிய குடிசைத் தொழில்களிலும் ஈடுபடுவது கிராம நலத்துக்கு அனுகூலமாகும்.

அதனால் இம்மூன்று பிர்க்காக்களில் பல இடங்களில்

கோழிப் பண்ணைகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. அங்கு உயர்ந்த ரகக் கோழிகள் வளர்க்கப்படுகின்றன. அவற்றின் முட்டைகள் இனப் பெருக்கத்துக்கும், விற்பனை செய்வதற்கும் உபயோகமாகின்றன.

கலசப்பாக்கம் பிர்க்காவில் பத்தியவாடி கிராமத்தில் பாய் முடையும் சங்கம் ஒன்று நிறுவப்பட்டுள்ளது. அச் சங்கத்தார் மாதந்தோறும் 20 பாய்கள் முடைகிறார்கள்.

இப்பிர்க்காக்களில் எண்ணெய் ஆட்டுதல், மாவரைத்தல், காகிதம் உற்பத்தி செய்தல் ஆகிய பிறதொழில்களையும் நடத்த முயற்சி செய்யப்பட்டு வருகிறது.

## கதர் நிர்மாணத் திட்டம்

கிராமங்களில் வீடுதோறும், சமையல் செய்தல், வீடு சுத்தம் செய்தல், ஆடை அணிதல், முதலிய சாதாரண வேலைகளைப் போலவே நாம் நூல் நூற்பதையும் ஒரு முக்கிய வீட்டுவேலையாகக் கருதி ஆர்வமுடன் ஈடுபட வேண்டும்.

கதர் நிர்மாணத் திட்டத்தின்கீழ் காதிவேலை செய்பவர் நியமிக்கப்பட்டுள்ளனர். அவரும் கிராம சேவக்குகளும் இப்பிர்க்காக்களிலுள்ள ஒவ்வொரு கிராமத்துக்கும் சென்று அங்குள்ளவர்களுக்கு எளிய முறையில் நூல் நூற்கக் கற்பித்து வருகிறார்கள். தற்போது இப்பிர்க்காக் கிராமவாசிகளில் பெரும்பாலோர் நூல் நூற்பதில் தேர்ச்சி பெற்றுள்ளார்கள்.

இதுவரையில் இப் பிர்க்காக்களைச் சேர்ந்த பாடசாலை மாணவ மாணவிகளுக்கு ஆயிரம் 'தக்ளி'களும், நூல் நூற்கப் பஞ்சும் இலவசமாக வழங்கப்பட்டுள்ளன. கிராம மக்களுக்குக் குறைந்த விலையில் 196 கிஸான் சர்க்காக்களும், பெட்டி சர்க்காக்களும் விற்கப்பட்டன. இவற்றைக் கிரயத்துக்கு வாங்கியவர்கள் நூற்ற நூலில் தலைக்கு மாதமொன்றுக்கு $7\frac{1}{2}$ சிட்டம்வீதம் கொடுத்துவிடவேண்டும்.

இவ்வாறு மக்கள் அளிக்கும் சிட்டத்தைக் கொண்டு கதர்த்துணி நெய்யப் பழங்கோவிலில் சுமார்

ரூ. 140 செலவில் தறியொன்று அமைக்கப்பட்டிருக்கிறது.

கலசப்பாக்கம், மேலாரணி ஆகிய இடங்களில் 72 ஆசிரியர்கள் நூல் நூற்கும் பயிற்சி பெற்று சர்க்காரிடமிருந்து சர்டிபிகேட்டும் வாங்கியுள்ளார்கள்.

இப்பிர்க்காக்களில் தென்பள்ளிப்பட்டு, பாணும்பட்டு ஆகிய இடங்களில் காந்தீய நிர்மாணத் திட்ட ஊழியப் பயிற்சி முகாம் நடத்தியதில் 70 மாணவர்கள் பயிற்சி பெற்று, தத்தம் கிராமங்களின் முன்னேற்றத்துக்கான சிறந்த பணியாற்றி வருகிறார்கள். இதைப்போல, சொர கொளத்தூர், மேல்பாலூர், பெரிய களாம்பாடி ஆகிய இடங்களில் பயிற்சி முகாம்கள் நடத்த முயற்சி எடுக்கப் பட்டு வருகிறது.

பாடசாலை ஆசிரியர், மாணவர், நிர்மாண ஊழியர்கள் ஆகியோர் ஹரிஜனங்கள் வாழும் சேரிகளுக்கும், சுகாதார முறையை அறியாத கிராமங்களுக்கும்சென்று,தெருக்களைச் சுத்தம் செய்வதிலும், குப்பை கூளங்களை அகற்றுவதிலும் அக்கறை காட்டி, அங்குள்ள மக்களுக்கு அறிவுறுத்தி வருகிறார்கள்.

ஆங்காங்குக்குவிந்து கிடக்கும் குப்பைகள் அகற்றப்படுகின்றன. அகற்றப்படும் குப்பைகள் நிலவளம் பெருக்க உபயோகமாகின்றன.

### வார்தா முறையில் கக்கூஸ்கள்

கிராம மக்கள் கண்ட இடங்களில் மலங்கழித்து, கிராமமெங்கும் துர்நாற்றம் வீசச் செய்யும் துர்ப்பழக்கம் ஒழிய வேண்டுமென்னும் நோக்கத்துடன் இப்பிர்க்காக் கிராமங்களில் வார்தாமுறையில் கக்கூஸ்கள் அமைக்கப்பட்டு வருகின்றன. இதுவரையில் 30 கக்கூஸ்கள் அமைக்கப்பட்டுள்ளன.

மக்கள் மலத்தில் ஈரம், நைட்ரோஜின், பாஸ்பரஸ், பொட்டாஷ், கால்ஸியம் முதலியவை சேர்ந்திருப்பதால், அது மரஞ்செடி கொடிகளுக்குச் சிறந்த எருவாகிறது. அதனால் மலத்தை வீணாக்காது மணலுடன்

கலந்து மக்கவைத்து, எருவாக மரஞ்செடி கொடிகளுக்கு உபயோகிக்கிறார்கள்.

### சுகாதார சேவா சங்கங்கள்

இப்பிர்க்காக்களின் சுகாதார அபிவிருத்திக்காக, கிராமங்களில் சுகாதார சேவா சங்கங்கள் நிறுவப்பட்டுள்ளன. இச்சங்கங்கள் மூலம் கிராம மக்கள் தங்கள் வீடு வாசல்களையும், தெருக்களையும் சுத்தமாக வைத்துக் கொள்ளுகிறார்கள். இம்மூன்று பிர்க்காக்களிலும் 15 சுகாதார சேவா சங்கங்கள் நிறுவப்பட்டுள்ளன.

கிராம வீதிகளில் மழைநீர் தேங்கி நின்று கொசுக்கள் வசிக்க வசதியளிக்கிறது. ஆதலால் வீதிகளில் இருபுறங்களிலும் ஜலதாரைகள் கட்டப்பட்டு ஜலபோக்குக்கு வழி கோலப்பட்டுவருகிறது. இப் பிர்க்காக்களில் 160 ஜலதாரைகள் அமைக்கப்பட்டுள்ளன.

### வைத்திய சாலைகள்

நோயால் நலியும் மக்களுக்கும், குழந்தைகளுக்கும் மருந்தளித்து நோயகற்ற இப் பிர்க்காவைச் சேர்ந்த சில கிராமங்களில் வைத்திய சாலைகள் நிறுவப்பட்டுவருகின்றன.

தென்பள்ளிப்பட்டு கிராமத்தில் ஒரு யூனனி வைத்திய சாலை திறந்துவைக்கப்பட்டது. இக் கிராமத்தார் வைத்திய சாலைக்கென வீடொன்று இனமாக அளித்துள்ளார்கள். மேலாரணி, கலசப்பாக்கம் ஆகிய இடங்களிலும் சிசு சம்ரக்ஷண சாலைகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இச் சாலைகள் சேவையால் சிசுக்களின் மரண விகிதமும் குறைந்துள்ளது.

டாக்டர், நர்ஸ், கம்பவுண்டர் கொண்ட ஒரு மத்திய ஆரம்ப சுகாதார வைத்திய சாலையைக் கலசப்பாக்கம் பிர்க்காவில் நிறுவ திட்டம் வகுக்கப்பட்டு ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

குஷ்டரோகத்தைப் பரவ விடாமல் தடுக்க வழிவகைகள் கோலப்பட்டு வருகின்றன. இந் நோயாளிகள் தங்கு

வதற்கு மேலாரணியில் இடவசதி ஏற்படுத்தப்பட்டுள்ளது. குஷ்டரோகிகள் பலர் ஊசி குத்திக்கொண்டு வருகிறார்கள். ஆதமங்கலத்தில் குஷ்டரோக நிவாரண ஆஸ்பத்திரி யொன்று நிறுவப்பட்டுள்ளது.

பாம்பு, தேள், முதலிய விஷப்பூச்சிகளின் கடிக்கு சிறந்த மருந்து வகைகள் சேகரித்து வைக்கப்பட்டுள்ளன. இவற்றுக்காக ரூ. 63--12--0 செலவழிக்கப்பட்டுள்ளது.

## கிராமக் கல்வி

கலசப்பாக்கம் பிர்க்காவில் பில்லூர், ஆனைவாடி காலூர், அலங்காரமங்கலம், தென்னகரம் ஆகிய இடங் களில் ஐந்து ஆரம்பப் பாடசாலைகள் அமைக்க ஸ்தல ஸ்தாபனத்தார் அனுமதித்துள்ளனர்.

துரிஞ்சாபுரம் பிர்க்காவில் பெரியகளாம்பாடியில் ஸ்தல ஸ்தாபனத்தார் புதிய பாடசாலையொன்று திறந்து வைத்துள்ளனர்.

இன்னும், உதிலம்பூண்டி, சீலப்பந்தல், சானுனேந்தல், நல்லான்பிள்ளை பெத்தான் ஆகிய கிராமங்களில் ஊர் மக் கள் பாடசாலைக் கட்டிடங்கள் கட்டிக்கொடுக்க முன்வந் துள்ளமையால் புதிய பாடசாலைகள் திறந்துவைக்க ஏற் பாடாகி வருகிறது.

மேலாரணி, கலசப்பாக்கம் ஆகிய இடங்களில் உள்ள ஆரம்பப் பாடசாலைகள் உயர்தர ஆரம்பப் பாடசாலை களாக மாற்றப்பட்டு நடைபெற்றுவருகின்றன.

கடலாடியிலும் துரிஞ்சாபுரம் பிர்க்காவைச் சேர்ந்த மங்கலத்திலும், மன்சூராபாத்திலும் ஆரம்பப் பாடசாலை கள் உயர்தர ஆரம்பப் பாடசாலைகளாக மாற்றப்பட் டுள்ளன.

கலசப்பாக்கம் பிர்க்காவில் 10 ஆரம்பப் பாடசாலைகளும், துரிஞ்சாபுரம் பிர்க்காவில் 9 ஆரம்பப் பாடசாலைகளும், கடலாடி பிர்க்காவில் 3 ஆரம்பப் பாடசாலைகளும் ஆதாரக் கல்விப் பாடசாலைகளாக மாற்றப்பட்டு முன்னேற்றத்துக் கறிகுறியான முறையில் நடந்துவருகின்றன.

## முதியோர் கல்வி

கலசப்பாக்கம் பிர்க்காவிலுள்ள 29 கிராமங்களில் முதியோருக்குக் கல்வி போதிப்பதற்கு இராப் பள்ளிக்கூடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றால் 350 முதியோர் எழுதப்படிக்கத் தெரிந்துகொண்டுள்ளனர். இப்பாடசாலைகளுக்கு இரவில் விளக்கு எரிவிக்கவும், முதியோருக்குச் சிலேட்டுகள் வாங்கவும் ரூ. 2,000 செலவாயிற்று.

துரிஞ்சாபுரம், கடலாடி ஆகிய பிர்க்காக்களில் 24 இடங்களில் முதியோர் கல்வி வசதிபெற 24 இராப்பள்ளிக்கூடங்களில் கல்வி போதிக்கப்பட்டு வருகிறது. விளக்குகள் எரிவிக்கவும், சிலேட்டுகள் வழங்கவும் இதுவரையில் ரூ. 1,000 செலவழிந்திருக்கிறது. காலைமுதல் மாலைவரையில் ஓயாது உழைத்துச் சோர்வடையும் முதியோர் கல்வி கற்கச் சிறிது தயங்குவார்கள். அதை உணர்ந்து அவர்கள் கற்கும் கல்விக்கு உதவியாக சில பாடல்களையும், நல்ல முறையில் பஜனைகளையும் நடத்திவைக்க ஏற்பாடாயிருக்கிறது. அதன் பிரகாரம் 5 கிராமங்களுக்கு 5 ஹார்மோனியங்களும், 5 மிருதங்கங்களும் இனமாக வழங்கப்பட்டுள்ளன.

ஆண்டுதோறும் முதியோர் கல்விக்கென நியமிக்கப்பட்டுள்ள கமிட்டிகள் மூலம், ஆசிரியர், மாணவர்கள் உதவியைக்கொண்டு முதியோர் கல்வி வாரக் கொண்டாட்டம் நடைபெறுகிறது.

## வாசக சாலைகளும், புத்தக சாலைகளும்

கிராமப பஞ்சாயத்து, பொதுமக்கள் ஆகியோரின் ஆதரவில் இம்மூன்று பிர்க்காக்களிலும் 10 வாசக சாலைகள் நிறுவப்பட்டுள்ளன. பழங்கோயில் கிராமத்தில் ரூ. 1,500 செலவில் கிராம மக்களின் ஆதரவால் வாசக சாலையொன்று கட்டப்பட்டுள்ளது.

கலசப்பாக்கம் பிர்க்காவிலுள்ள கிராம மக்கள் படித்துப் பயன்பெற இரவலாகப் புத்தகங்கள் வழங்கப்பட்டு வருகின்றன. சுமார் 2,000 ரூபாய் செலவில் 1,190 புத்தகங்கள் வாங்கி உபயோகப்படுத்தப்பட்டு வருகின்றன.

## கூட்டுறவு பொது அமைப்பு

கிராம மக்களின் கூட்டுறவைப் பலப்படுத்தவும், கூட்டுறவு முறையில் கிராம வேலைகளைச் செய்யவும், பல்வேறு கூட்டுறவு சங்கங்கள் இப்பிர்க்காக்களில் அமைக்கப்பட்டுள்ளன.

கலசப்பாக்கம் பிர்க்காவில் பலநோக்கக் கூட்டுறவு சங்கங்கள் ஆறும், துரிஞ்சாபுரம் பிர்க்காவில் ஐந்தும், கடலாடி பிர்க்காவில் நான்கும் பணியாற்றி வருகின்றன.

இம்மூன்று பிர்க்காக்களில் ஏற்கனவேயுள்ள பஞ்சாயத்து போர்டுகளுடன் அடுத்தடுத்துள்ள கிராமங்களை இணைத்தோ, புதிதாகச் சில கிராமங்களில் பஞ்சாயத்து போர்டுகளை நிறுவியோ, பல பஞ்சாயத்து போர்டுகள் அமைக்கப்பட்டுள்ளன. இம் மூன்று பிர்க்காக்களிலும் பஞ்சாயத்து போர்டுகள் இல்லாத கிராமம் இல்லை என்றே கூறலாம்.

இதுவரையில் கலசப்பாக்கம் பிர்க்காவில் 24 கிராம சேவா சங்கங்களும், துரிஞ்சாபுரம் பிர்க்காவில் 15 கிராம சேவா சங்கங்களும், கடலாடி பிர்க்காவில் 10 கிராம சேவா சங்கங்களும் அமைக்கப்பெற்றுள்ளன. இவைகள் கிராம மக்களுக்குப் பலதுறைகளிலும் பணியாற்றி வருகின்றன.

வீடு கட்டும் கூட்டுறவு சங்கங்கள்மூலம், கலசப்பாக்கம், பூண்டி, கல்லூர் சோழவரம் போன்ற கிராமங்களில் வீடில்லா ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டித்தரப்பட்டுவருகின்றன.

இம்மூன்று பிர்க்காக்களில் ஆயிரக்கணக்கான ரூபா செலவில் சாலைகள் போடப்பட்டுள்ளன. சாலைகள் அமைக்கும் விஷயமாக பொதுமக்கள் உழைப்பின்மூலம் உதவிசெய்துள்ளார்கள். சில கிராமங்களில் பஞ்சாயத்து போர்டுகள் பண உதவி செய்துள்ளன.

இதுவரையில், சுமார் 29 மைல் நீளமுள்ள 13 சாலைகள் அமைக்கப்பட்டு 17 கிராமங்கள் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டுள்ளன. இவற்றால் 30,000 மக்கள் பயனடைந்

துள்ளார்கள். இது சம்பந்தமாய் நமது ராஜ்ய சர்க்கார் ரூ. 62,000 செலவு செய்திருக்கிறார்கள்.

## குடி தண்ணீர் கிணறுகள்

இம்மூன்று பிர்க்காக்களிலும் 500 மக்களுக்குக் குறையாதுள்ள எல்லாக் கிராமங்களிலும் (சேரிகள் உள்பட) இராட்டின வசதியுடன் குடி தண்ணீர் கிணறுகள் தோண்டப்பட்டுள்ளன. இதற்காக இதுவரையில் ரூ. 37,000 செலவழிக்கப்பட்டுள்ளது.

ரேடியோக்கள்.—கிராம மக்கள் ஓய்வு நேரங்களை நல்ல முறையில் பயன் படுத்தும் வகையிலும் அன்றாட உலக விஷயங்களைத் தெரிந்துகொள்வதற்கும் ஆங்காங்கு ரேடியோக்கள் அமைக்கப்பட்டு வருகின்றன.

## பிர்க்கா போர்டு கூட்டம்

மாதந்தோறும் ஒவ்வொரு கிராமத்திலும் பிர்க்கா போர்டு அபிவிருத்திக் கூட்டம் நடைபெறுகிறது. இக்கூட்டங்களுக்கு பிர்க்கா சம்பந்தப்பட்ட சட்டசபை அங்கத்தினர், ஜில்லா போர்டு தலைவர், ஜில்லா போர்டு அங்கத்தினர், பிர்க்கா நிர்மாண ஊழியர் முதலியோர் வருகிறார்கள். இக்கூட்டத்தில் பிர்க்காக்கள் அபிவிருத்தி சம்பந்தமாய்த் தீர்மானிக்கப்படும் விஷயங்களைக் கூடுமான வரையில் நிறைவேற்றி, பிர்க்காக்களை அபிவிருத்திசெய்ய வசதியுண்டு.

வீடு கிடைக்காமல் மக்கள் படுந்துன்பத்தை நீக்க இந்த ஜில்லாவில் எல்லா முனிசிபல் நகரங்களிலும், பெரிய பஞ்சாயத்துக்களிலும் வீடுகட்டும் கூட்டுறவு சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இச்சங்கங்கள் நமது ஜனநாயக சர்க்காரின் பணவுதவி பெற்று, காட்டுப்பாடியில் சுமார் 399 ஏக்கர் பரப்பு வாய்ந்த நிலத்தை ஆர்ஜிதஞ்செய்து, 1,928 வீடுகள் கட்ட, துண்டு துண்டுகளாகப் பிரித்து மக்களுக்கு வழங்கியுள்ளன. இந்த ஜில்லாவின் இதர பாகங்களில் 89 வீடுகள் இதுவரையில் கட்டி முடிக்கப்பட்டன.

மரச் சாமான், உலோக வேலைகளுக்கான கூட்டுறவு சங்கங்கள். செசவாளருக்கும் மாஜி-ராணுவத்தினருக்கும் அனுகூலமளிக்க நிறுவப்பட்டுள்ளன.

குடிசைத் தொழில்கள் சம்பந்தமான கூட்டுறவு சங்கங்கள் பின்வருமாறு:—

மாதர் குடிசைத் தொழில் கூட்டுறவு சங்கங்கள் 2, உலோகத் தொழிலாளர் கூட்டுறவு சங்கம் 1, கல் தச்ச வேலையாளர் கூட்டுறவு சங்கம் 1, குசவர் கூட்டுறவு சங்கங்கள் 2, குடை முடைபவர் கூட்டுறவு சங்கம் 1, பித்தான் உற்பத்தியாளர் கூட்டுறவு சங்கம் 1, குடிசைத் தொழில்கள் கூட்டுறவு சங்கம் 1, பாய் முடைபவர் கூட்டுறவு சங்கங்கள் 2, கதர் அபிவிருத்தி கூட்டுறவு சங்கம் 1, முட்டை விற்பனையாளர் கூட்டுறவு சங்கங்கள் 3.

விவசாய நிலங்களை இணைத்து ஒன்றுபடுத்த 4 கூட்டுறவு சங்கங்கள் பணியாற்றி வருகின்றன. 167 ஏக்கர் விஸ்திரணமுள்ள நிலங்கள் இவற்றின்மூலம் ஒன்றாக இணைக்கப்பட்டன. இவ்வித இணைப்பால் 864 தனித்தனி நிலங்களாய் இருந்தவை 125 ஆக இணைக்கப்பட்டன.

மாணவர் கூட்டுறவு ஸ்டோர்ஸ்.—கூட்டுறவு முறையில் மாணவர் உற்சாகமடையவும் சிக்கன முறைகளை அனுசரிக்கவும் இவ்வித சங்கங்கள் இந்த ஜில்லாவில் உள்ள உயர்தரப் பாடசாலைகளில் நிறுவப்பட்டுள்ளன. இவற்றின் எண்ணிக்கை 26. இச்சங்கங்கள் மூலம் மாணவர் பாடப் புத்தகங்களும் நோட்டுப் புத்தகங்களும் இன்னும் தங்களுக்குத் தேவையான இதர கல்வி சம்பந்தமான வஸ்துக்களும் பெறுகிறார்கள். இவற்றின் மூலம் கிடைக்கும் லாபத் தொகை ஏழை மாணவர்களுக்கு ஸ்காலர்ஷிப்பாக வழங்கப்படுகிறது.

நிலக் குடியேற்றக் கூட்டுறவு சங்கங்கள் இரண்டு இந்த ஜில்லாவில் இருக்கின்றன. இச்சங்கங்களின் அங்கத்தினர் பெரும்பாலோர் ஹரிஜனங்கள்; சிலர் பின் தங்கிய வகுப்பைச் சேர்ந்தவர்கள். ஒவ்வொரு அங்கத்தினருக்கும் 5 ஏக்கர் நிலம் வழங்கப்பட்டது.

# பஞ்சாயத்து ராஜ்யம்

*கிராமப் பஞ்சாயத்துக்களை அமைப்பதற்கான வழிகோலி, தனித்தனி சுயாட்சி ஸ்தாபனங்களாகப் பணியாற்றுவதற்கு அவசியமான அதிகார உரிமைகளை அவற்றுக்கு அரசாங்கம் அளிக்கும்.*

—இந்திய அரசியல் அமைப்பு.
ஷரத்து— 0

நம் இந்திய நாட்டின் புராதன, சமூக, பொருளாதார அமைப்புகள் யாவும் பஞ்சாயத்தின் அடிப்படையில் நிர்வகிக்கப்பட்டு வந்தன. கிராமங்கள் நிறைந்த நம் நாட்டில் பண்டைக் காலத்தில் கிராமப் பஞ்சாயத்துக்கள் சுதந்திரக் குடியரசுகளாக திகழ்ந்தன. இந்நாட்டில் பல்வேறு மாறுதல்கள், புரட்சிகள் ஏற்பட்ட சமயங்களிலும் கிராமப் பஞ்சாயத்துக்கள் தமக்குரிய நிர்வாக, பொருளாதார முறைகளை மாற்றிக் கொள்ளும் அவசியத்துக்கு உட்படவில்லை.

குடியாட்சி எண்ணமும், சுதந்திர உணர்ச்சியும் நம்மிந்திய நாடு முழுவதும் பரவியுள்ள இக்காலத்தில், நமது ஜன நாயக சர்க்கார், இப்போது நடைபெற்று வரும் பஞ்சாயத்

துக்களைச் சுயாட்சி சபைகளாகத் திருத்தியமைக்க முன்வந்துள்ளார்கள். அவைகளுக்கென ஒரு பிரத்தியேக சட்டமும் நிறைவேற்றப்பட்டுள்ளது.

இனி, பஞ்சாயத்துக்கள் சுய கட்டுப்பாடு, சுய நிர்வாகம் ஆகியவற்றோடு கூடிய சகல அதிகாரங்களும் பெற்ற தனி நிர்வாக ஸ்தாபனங்களாகத் திகழும். கிராம வாழ்க்கை, பொருளாதாரம் ஆகியவற்றின் முழு பொறுப்பையும் பஞ்சாயத்துக்கள் ஏற்றுக்கொண்டு கிராம முன்னேற்றத்துக்கான விஷயங்களில் ஈடுபட்டு நற்சேவை செய்து வரும். புதிதாக நிறைவேற்றப்பட்ட பஞ்சாயத்துச் சட்டம் 1951-ம் ௵ ஏப்ரல்௴ 1௳ முதல் இந்த ராஜ்யத்தில் அமல் நடத்தப்படும்.

## பஞ்சாயத்தின் அமைப்பு

சமீபத்தில் நிறைவேற்றப்பட்ட 1950-ம் ௵த்திய புது பஞ்சாயத்து சட்டத்தின் கீழ், 500-க்குக் குறையாத ஜனத் தொகை கொண்ட ஒவ்வொரு கிராமத்துக்கும் ஒவ்வொரு பஞ்சாயத்து அமைக்கப்படும். ஜனத் தொகை 500-க்குக் குறைந்த கிராமங்களை ஒன்று சேர்த்தோ அல்லது அருகில் உள்ள கிராமத்தோடு இணைத்தோ, ஒரு பஞ்சாயத்து நிறுவப்படும்.

சென்னை ராஜ்யத்தில் 15,830 கிராமங்களில் இப்போது பஞ்சாயத்துக்கள் இல்லை. புது பஞ்சாயத்துச் சட்டம் அமலுக்குக் கொண்டு வரப்பட்டிருப்பதால், நாளடைவில் கிராமங்களுக்கெல்லாம் பஞ்சாயத்துக்கள் ஏற்பட்டுவிடும்.

இப்புதிய பஞ்சாயத்துக்கள், முன்போல் பெரிய, சிறிய பஞ்சாயத்துக்கள் என அழைக்கப்படமாட்டா. அவைகள் முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பு பஞ்சாயத்துக்கள் என வழங்கப்படும்.

முதல் வகுப்பு பஞ்சாயத்து 5,000 மக்களுக்குக் குறையாமலும், 10,000 ரூபாய்க்குக் குறையாத வருமானமுடையதாகவும் இருக்கும். இந்த ஜனத்தொகைக்கும் வருமானத்துக்கும் குறைவுபட்ட ஏனைய பஞ்சாயத்துக்கள்

இரண்டாம் வகுப்பைச் சேர்ந்தவையாகும்.

## எண்ணிக்கை நிர்ணயம்

அந்தந்தப் பஞ்சாயத்தின் அங்கத்தினர், ஜனத்தொகைக்கு ஏற்றவாறு 5-லிருந்து 15 வரையில் நிர்ணயிக்கப்படுவர். சட்டசபை தேர்தலுக்கான பஞ்சாயத்தில் அடங்கிய பிரதேசத்துக்குரிய வாக்காளர் ஜாபிதாவில் கண்ட மக்கள்தாம் பஞ்சாயத்து அங்கத்தினர்களையும் தேர்ந்தெடுப்பார்கள். எல்லாப் பஞ்சாயத்துத் தேர்தல்களிலும் வயது வந்தோர் யாவரும் கலந்து கொள்வார்கள். ரகசிய முறையில்தான் (secret ballot) தேர்தல் நடைபெறும்.

பஞ்சாயத்துத் தலைவரை வாக்காளர் யாவரும் சேர்ந்துதான் தேர்ந்தெடுப்பார்கள் ; அங்கத்தினர்கள் மட்டும் தேர்ந்தெடுக்கமாட்டார்கள். தேர்ந்தெடுக்கப்படும் தலைவர் உத்தியோக முறையில் பஞ்சாயத்து அங்கத்தினராகவும் கருதப்படுவார். கிராம முன்சீப், அரசாங்க ஊழியர், ஸ்தல ஸ்தாபன உத்தியோகஸ்தர் பஞ்சாயத்து அங்கத்தினராக முடியாது.

அங்கத்தினர்கள் தம்மில் ஒருவரை உப தலைவராகத் தேர்ந்தெடுக்கவேண்டும். தலைவர், உப தலைவர், அங்கத்தினர் முதலியோருக்குச் சம்பளம் கிடையாது. அவர்கள் கௌரவ அந்தஸ்துக்கு உரியவர்கள்.

இது முதல் பத்து வருஷ காலம் வரையில் முஸ்லீம்கள், இந்திய கிறிஸ்துவர்கள், ஷெட்யூல் வகுப்பினர் ஆகியோருக்குப் பஞ்சாயத்துக்களில் இடங்கள் ஒதுக்கப்படும். பஞ்சாயத்துத் தலைவர், அங்கத்தினர் ஆகியவர்களின் உத்தியோக காலம் மூன்று வருஷங்களே.

நிர்வாக அதிகாரத்தை வகிக்கும் பஞ்சாயத்துத் தலைவரும், சில குறிப்பிட்ட பஞ்சாயத்துக்களுக்கு நிர்வாக அதிகாரியாக நியமிக்கப்படுபவரும் பஞ்சாயத்துத் தீர்மானங்களை நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டும். எந்தத் தீர்மானவாவது நீதியற்றது அல்லது பொது

மக்களுக்குக் கெடுதி விளைவிக்கக்கூடியது என்று தோன்றி ஞல் அத் தீர்மானத்தை அவர்கள் சர்க்காரின் ஆலோசனைக்கு விடவேண்டும். சர்க்காரின் தீர்ப்பே முடிவானதாகும்.

பஞ்சாயத்துத் தலைவர் பதினைந்து நாட்களுக்கு மேற்பட்டுத்தொடர்ச்சியாய்க் கிராமத்தில் இல்லாதிருந்தாலும், அலுவலைப் பார்க்க அசக்தராய் விட்டாலும் அவருக்குப் பதிலாக உப தலைவர் அவர் காரியங்களைப் பார்த்துவருவார்.

## பதவி நீக்கம்

பஞ்சாயத்துத் தலைவரோ, உப தலைவரோ தமக்குள்ள அதிகாரத்தைத் தக்க வழியில் செலுத்தத் தவறிஞலும், துஷ்பிரயோகம் செய்தாலும், பஞ்சாயத்துப் பணத்தைக் கையாண்டாலும், வேறு அக்கிரமச் செயல்களைச் செய்தாலும் அத்தகையோரை, பதவியிலிருந்து நீக்க லோகல் போர்டு இன்ஸ்பெக்டர் அதிகாரம் பெற்றுள்ளார்.

உத்தியோகத்திலிருந்து நீக்கப்படும் தலைவர், உப தலைவர் அல்லது அங்கத்தினர் ஒரு வருஷம் வரையில் பஞ்சாயத்துத் தேர்தலுக்கு நிற்கலாகாது. அவர்களில் எவராவது கிரிமினல் சட்டத்தின் கீழ், குற்றவாளியாகத் தண்டிக்கப்பட்டால், ஐந்து வருஷ காலம் வரையில் அவர் தேர்தலுக்கு நிற்கக்கூடாது.

கடமைகளை நிறைவேற்ருமல், அதிகாரத்தை மீறும் பஞ்சாயத்துக்களைச் சர்க்கார் கலைத்து விடலாம். அவ்விதம் சர்க்கார் கலைத்த பஞ்சாயத்தின் அங்கத்தினர், தலைவர் நீங்கலாக, தங்கள் பதவியினின்றும் விலகுவார்கள். பஞ்சாயத்து மீண்டும் ஏற்படும் வரையில் அதனை நிர்வாகத் தலைவரே நடத்தி வருவார். அப்போது தலைவர் ஸ்தானம் காலியாய் இருந்தால், ஸ்பெஷல் ஆபீஸர் ஒருவர் நியமிக்கப்பட்டு அப் பஞ்சாயத்தின் விஷயங்களை நிர்வகித்து வருவார்.

## பஞ்சாயத்தின் அதிகாரங்கள்

ஒரு பஞ்சாயத்து, தன் பொருளாதார நிலைமைக்குத் தக்கவாறு நிறைவேற்றவேண்டிய கடமைகள், தன் யுக்

தானு சாரமாகச் செய்யவேண்டிய கடமைகள் என இரு வகைக் கடமைகளை நிறைவேற்ற வேண்டியதாய் இருக்கிறது. அவையாவன :

கட்டாயக் கடமைகள்.—(1) பாதைகள் அமைத்தல், அவற்றைப் பழுதுபார்த்தல். (2) தெருக்களிலும் பொது இடங்களிலும் விளக்குகள் போடுதல். (3) வடிகால்கள் கட்டுதல். (4) தெருக்களைச் சுத்தம் செய்தல். (5) குப்பை, கூளங்களை அகற்றல். (6) மலஜலம் கழிக்கும் இடங்களை அமைத்தல். (7) சுத்த ஜல வசதியளித்தல். (8) கிணறுகள், குளங்கள் வெட்டுதல், அவற்றைப் பழுது பார்த்து நல்ல நிலைமையில் வைத்தல். (9) சுகாதார விதியை யொட்டி கிராமத்தைப் பராமரித்தல்.

ரூ. 100 வரையில் உள்ள சிவில் வழக்குகளைப் பஞ்சாயத்து விசாரித்து தீர்ப்பு செய்யலாம்; கிரிமினல் வழக்குகளில் ரூ. 15 வரையில் அபராதம் விதிக்கலாம். ஒரு குற்றவாளிக்கு இதற்கு மேற்பட்ட தண்டனை விதிப்பது நியாயமென்று பஞ்சாயத்து நினைத்தால் அக்குற்றவாளி சம்பந்தப்பட்ட வழக்கை சப்-டிவிஷன் மாஜிஸ்ட்ரேட்டின் விசாரணைக்கு அனுப்பவேண்டும்.

சப்-ரெஜிஸ்ட்ரார் காரியாலயம் இல்லாத பஞ்சாயத்துக்களில் சில குறிப்பிட்ட தஸ்தாவேஜுக்களைப் பதிவு செய்ய பஞ்சாயத்துக்களுக்கு அதிகாரமுண்டு.

குடி மராமத்துகளை நிறைவேற்றவும், அவற்றுக்காகக் கட்டணங்கள் விதிக்கவும் பஞ்சாயத்துக்கு அதிகாரமுண்டு. பாதுகாக்கப்படாத காடுகள், மேய்கால்கள், களங்கள், தோப்புகள் யாவும் பஞ்சாயத்து நிர்வாகத்தைச் சேர்ந்தவை. கிராமப் பொது அல்லது சமுதாய சொத்து அல்லது வருவாய் இனி பஞ்சாயத்தைச் சேர்ந்ததே.

யுக்தானுசாரக் கடமைகள்.—(1) சாலைகளின் ஓரத்தில் மரங்கள் நட்டுப் பயிரிடுதல், பாதுகாத்தல். (2) ஆரம்பப் பாடசாலைகள் அமைத்தல். (3) வாசக சாலைகள், பொது மார்க்கெட்டுகள், வண்டி மேடுகள், ஆட்டுத் தொட்டிகள், ஆஸ்பத்திரிகள், பிரசவ, சிசு

சம்ரக்ஷண சாலைகள் ஏற்படுத்தல். (4) சந்தைகள் திரு விழாக்கள் முதலியவற்றைக் கண்காணித்தல். (5) விவசாயக் கண் காட்சிகளை நடத்தல். (6) ரேடியோ உபகரணங்கள், விளையாட்டு மைதானங்கள், தேகப் பயிற்சிக்குரிய ஸ்தாபனங்களை நிறுவுதல்.

வீட்டு வரி, வண்டி வரி, தொழில் வரி இவைகள் சர்க்கார் நிர்ணயிக்கும் வகையில், வசூலிக்கப்பட வேண்டும். இன்ஸ்பெக்டர் குறிப்பிடும் வேறு வரிகளையும் விதிக்கலாம். பஞ்சாயத்து நிர்வாகத்துக்காக சர்க்காரும் மான்யம் வழங்குகிறார்கள். ஒவ்வொரு ஆண்டிலும் இந்த ராஜ்யத்தில் வசூலிக்கப்படும் மொத்த நில வருமானத்தில் 12½ சத விகிதத் தொகையை இரண்டாம் வகுப்பு பஞ்சாயத்துக்களுக்கு ஜனசங்கியைக்கு ஏற்ப சர்க்கார் வினியோகம் செய்வார்கள். இவ் வருமானங்களைக் கொண்டு பஞ்சாயத்துக்கள் தத்தம் கிராமத்துக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்யவேண்டும். ஒவ்வொரு பஞ்சாயத்தின் வரவு-செலவு கணக்குகளை, அதற்கென நியமிக்கப்படும் அதிகாரிகள் கட்டணமொன்றும் இன்றி வருஷா வருஷம் தணிக்கை செய்வார்கள்.

1950–51-ஆம் ஆண்டில் பாடகம், காப்பலூர் முதலிய பஞ்சாயத்து போர்டுகளுக்கு நமது ராஜ்ய சர்க்கார் ரூ. 4,155 மான்யமாக வழங்கியுள்ளார்கள்.

இந்த ஜில்லாவில் 13 பஞ்சாயத்துக்களில் சாதாரண விளக்குகளும், 2 பஞ்சாயத்துக்களில் 2 மின்சார விளக்குகளும் போடப்பட்டுள்ளன.

ஒரு பஞ்சாயத்தில் பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் வசதி ஏற்பட்டுள்ளது. 52 பஞ்சாயத்துக்களில் குடி தண்ணீர் வசதிக்கு வழிகள் கோலப்பட்டன. 16 பஞ்சாயத்துகளில் குடி தண்ணீர்க் கிணறுகள் பழுதுபார்க்கப் பட்டன. பஞ்சாயத்துக்கள் தெருக்களைச் சுத்தம் செய்யும் வேலையில் ஈடுபட்டுள்ளன. பஞ்சாயத்துக்களில் பொது மார்க்கெட்டுகள் அமைக்கப்பட்டுள்ளன. பஞ்சாயத்துக்களில் ரேடியோ செட்டுகள் அமைக்கப்பட்டுள்ளன.

பஞ்சாயத்துக்களில் பாடசாலைகள் நிறுவப்பட்டன. பல பஞ்சாயத்துக்களில் நூல் நிலையங்களும், 60 பஞ்சாயத்துக்களில் வாசக சாலைகளும் அமைக்கப்பட்டுள்ளன. சர்க்கார் நூல் நிலையங்களுக்காக ரூ. 980 மான்யம் வழங்கியிருக்கிறார்கள். சில பஞ்சாயத்துக்கள் ரஸ்தாக்கள் அமைத்தன. 17 பஞ்சாயத்துக்கள் பாலங்கள் கட்டின ;12 பஞ்சாயத்துக்கள் ரஸ்தாக்களைப் பழுது பார்த்தன.

1948–49-ஆம் ஆண்டில் 76 பஞ்சாயத்துக்கள் நூல் நிலைய பராமரிப்புக்கு சர்க்காரிடமிருந்து ரூ. 3,216 மான்யமாகப் பெற்றன. 1949–50-ஆம் ஆண்டில், திருவண்ணுமலை ஜில்லா பஞ்சாயத்து ஆபீசரின் ஆதீனத்துக்குட்பட்ட 26 பஞ்சாயத்துக்களுக்கு நமது சர்க்கார் நூல் நிலைய மான்யமாக ரூ. 850 வழங்கியுள்ளார்கள்.

வேலூர் ஜில்லா பஞ்சாயத்து ஆபீசர் ஆதீனத்திலுள்ள பஞ்சாயத்துக்கள் பின்வருமாறு :—

| வருஷம் | சிறிய பஞ்சாயத்துக்கள். | பெரிய பஞ்சாயத்துக்கள். |
|---|---|---|
| 1949–50 | 500 | 12 |
| 1947–48 | 326 | ... |

இந்த ஜில்லாவிலுள்ள முனிசிபல் நகரங்களும், அவைகள் சென்ற நான்கு வருஷ காலமாக நிறைவேற்றியுள்ள காரியங்களும் பின்வருமாறு :—

## வேலூர் முனிசிபாலிடி

வேலூர்-சைதாப்பேட்டை முனிசிபல் மத்தியதரப் பாடசாலை உயர்தரப் பாடசாலையாக மாற்றப்பட்டது. பொது மக்களின் நன்மைக்காக நான்கு ரேடியோ செட்டுகள் அமைக்கப்பட்டுள்ளன ; சுமார் 150 மெர்குரி வேப்பர் விளக்குகள் போடப்பட்டுள்ளன ; மூன்று பூங்காவனங்கள் அமைக்கப்பட்டன ; பருவ மழை தவறிய காலத்தும் மக்களுக்குக் குடி தண்ணீர் வசதிக்காக பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் நீர் நிலையத்தில் மின்சார பம்புகள் இயங்கி வருகின்றன ; தூசு பரவாத 4 ரஸ்தாக்கள் அமைக்கப்பட்டு

ROJA MUTHIAH
17, HOSPITAL STREET
KOTTAIYUR-623 106

விட்டன. இன்னும் 5 ரஸ்தாக்கள் வேலை நடந்து வருகிறது; நடப்பு வருஷத்தில் குப்பை உர உற்பத்தி வேலை நடந்தேறி வருகிறது.

## வாணியம்பாடி முனிசிபாலிடி

கல்வி.—ஹரிஜனங்களுக்காக கோணமேட்டுச் சேரியில் ஒரு ஆரம்பப் பாடசாலை ஆரம்பித்துவைக்கப்பட்டது.

முதியோர்களுக்குக் கல்வி போதிக்கும் பாடசாலைகள் கூடிய சீக்கிரம் திறக்கப்படும்.

பொது சுகாதாரம்.—முறைக் காய்ச்சல் தடுப்புக்கான வழி வகைகள் கோலப்பட்டுள்ளன. குப்பை எரு உற்பத்தி செய்து பொது மக்களுக்கு விற்கப்படுகிறது. சிசு சம்ரக்ஷணைக்காக 2 மருத்துவ மாதர் அதிகமாக நியமிக்கப்பட்டுள்ளார்கள். ரூபாய் ஒரு லட்சத்துக்கு மேற்பட்ட செலவில் மாதர்களுக்கும், குழந்தைகளுக்கும் ஒரு ஆஸ்பத்திரி கட்டப்பட்டு வருகிறது.

ரஸ்தாக்கள்.—சர்க்கார் வழங்கியுள்ள மான்யத் தொகையைக் கொண்டு 3 சிமிட்டி ரஸ்தாக்கள் அமைக்கப்பட்டு வருகின்றன. அநேக சிறிய சந்துகளுக்கு சிமிட்டி போடப்பட்டுவருகிறது.

பொது சௌகரியங்கள்.—நேரம் அறிவிக்கும் "ஸைரென்" என்னும் கருவி நிறுவப்பட்டுள்ளது. 'கோஷா' மாதர்களுக்கென பூங்கா ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. இங்கு ரேடியோ செட்டு ஒன்று நிறுவ ஏற்பாடாகி வருகிறது. இங்கு ஒரு நூல் நிலையமும் வாசகசாலையும் நிறுவ உத்தரவாயிருக்கிறது. ரூ. 500-க்குப் புத்தகங்கள் வாங்கப்பட்டுள்ளன.

ரஸ்தா ஓரங்களில் மரங்கள் நட்டுப் பயிராக்க ஐந்து வருஷத் திட்டமொன்று வகுக்கப்பட்டிருக்கிறது. 5 மஸ்தூர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். வனமகோற்சவத்தின்போது 400 மரங்கள் நடப்பட்டன.

முனிசிபல் காரியாலய சிப்பந்திகள் மாதமொன்றுக்கு ரூ. 120-க்கு தேசிய சேமிப்பு சர்டிபிகேட்டுகளும்,

ஸ்டாம்புகளும் வாங்கத் தூண்டப்பட்டு வருகிறார்கள்.

## வாலாஜாபேட்டை முனிசிபாலிடி

பாலாற்றிலிருந்து பாதுகாப்பமைந்த குடி தண்ணீர் இந்நகருக்கு விநியோகிக்கப்பட்டு வருகிறது. அதனால் இங்கு முறைக் காய்ச்சல், காலரா முதலிய கொள்ளை நோய்கள் அடிக்கடி மக்களைப் பீடிப்பது நின்றுவிட்டது.

## திருவண்ணாமலை முனிசிபாலிடி

1948-ம் ஆண்டு பெண்களுக்கென திறக்கப்பட்ட மத்தியதரப் பாடசாலை உயர்தரப் பாடசாலையாக மாறியுள்ளது. இப்பாடசாலையை ஆரம்பிக்க சர்க்கார், போதனைக்காகவும், பாடசாலைக்குரிய பொருள்கள் வாங்கவும் மான்யம் வழங்கினர். இப்பாடசாலை, மாதர்களுக்கு வரப்பிரசாதமெனக் கருதப்படுகிறது.

ஜனநெருக்கமுள்ள ஸ்தலத்தில் போகும் கடை வீதிக்கு 3 பர்லாங்கு வரையில் சிமிட்டி-கான்கிரீட் போடப்பட்டது. அவ்வீதியில் இப்போது தூசி பறப்பதில்லை.

தெருக் குப்பைகளும், மலமும் குப்பை உரமாக மாற்றப்படுகின்றன. இவ்வகை எருவுக்குக் குறைந்த விலை நிர்ணயித்திருப்பதால் இதை விவசாயிகள் ஏராளமாய் வாங்கி உபயோகிக்கிறார்கள்.

## ஆம்பூர் முனிசிபாலிடி

நமது ஜனநாயக சர்க்கார் பதவி ஏற்றபின், ஆம்பூர் பஞ்சாயத்து போர்டு முனிசிபாலிடியாக மாற்றப்பட்டது. பொதுஜன நன்மைக்காக இங்கு "ஸைரென்" ஒன்று அமைக்கப்பட்டது. ஒரு வாசகசாலையும் திறந்து வைக்கப்பட்டது.

இந்த ஜில்லா போர்டின் ஆதீனத்திலிருந்த ஆஸ்பத்திரியையும், ஆறு ஆரம்பப் பாடசாலைகளையும் இந்த முனிசிபாலிடியார் ஏற்றுக்கொண்டு நடத்தி வருகிறார்கள். முனிசிபல் பிரதேசமெங்கும் கட்டாயக் கல்வி முறை

புகுத்தப்பட்டுள்ளது. இப் பாடசாலைகளில் பள்ளிக்குப் போகும் வயதுள்ள சிறுவர், சிறுமியர் 60–70 சத விகிதம் படித்து வருகிறார்கள். ஒரு பஸ் ஸ்டாண்டு, பிள்ளைகள் விளையாடுமிடம், பூங்கா அமைப்பதற்கு நிலம் ஆர்ஜிதப்படுத்தப்படுகிறது. 1950–51-ஆம் ஆண்டில் 208 மரங்கள் நடப்பட்டன.

ஆம்பூர் - சாத்கூர் ரஸ்தாவிற்கு 6 பர்லாங்கு நீளத்திற்கும், ராணிப்பேட்டை - கிருஷ்ணகிரி ரஸ்தாவிற்கு 1 மைல் 1 பர்லாங்கு நீளத்திற்கும் தார் போடப்பட்டது.

## குடியாத்தம் முனிசிபாலிடி

இங்குக் குப்பை உரம் தயாரிக்கப்படுகிறது. அது விவசாயிகளுக்குப் பெரிதும் பயன்படுகிறது. நிலங்களுக்கு அதை உபயோகிப்பதால் தானிய உற்பத்தியில் பெருக்கம் ஏற்பட்டுள்ளது.

"செப்டிக் டாங்க் கக்கூஸ்கள்" கட்டுவதற்கு இந்த முனிசிபாலிடிக்கு சர்க்கார் ரூ. 15,000 மான்யமாக வழங்கியுள்ளார்கள். ஹரிஜனச் சேரிகளில் அத்தகைய கக்கூஸ்கள் இரண்டு அமைக்கப்பட்டுவிட்டன. இன்னும் மூன்று க்க்கூஸ்கள் கட்ட ஏற்பாடாகி வருகிறது.

ரூ. 1,30,000 செலவில் முனிசிபல் உயர்தரப் பாடசாலைக் கட்டிடம் கட்டி முடிந்தது. அதற்காக சர்க்கார் ரூ. 22,977 மான்யம் வழங்கியுள்ளார்கள்.

ஒரு மத்தியதரப் பாடசாலை 1948–49-ல் திறக்கப்பட்டது. அதற்காக பொது மக்கள் மனமுவந்து வழங்கியுள்ள தொகை ரூ. 30,000.

இங்குள்ள உயர்தர எலிமெண்டரி பாடசாலையில் 1,600 மாணவர்கள் படித்து வருகிறார்கள். 40 ஆசிரியர்கள் இப் பாடசாலையில் கல்வி போதித்து வருகிறார்கள். 1948-ல் ஒரு ஆரம்பப் பாடசாலை புதிதாகத்திறந்துவைக்கப்பட்டது.

இந்த முனிசிபாலிடி தன் வரும்படியில் 40 சத விகிதத் தொகையை உயர்தர, ஆரம்பக் கல்விக்காகச் செலவழிக்கிறது.

இந்நகரிலுள்ள எல்லா வீதிகளிலும் மின்சார விளக்குகள் போட ஏற்பாடாயிருக்கிறது. தனிப்பட்டவர்களின் ஆதீனத்தில் இருந்து வந்த மின்சார வினியோக உரிமையை நமது சர்க்கார் 1950-ம் ஆண்டில் ஏற்றுக்கொண்டு இவ்வேற்பாட்டுக்கு அங்கீகாரம் அளித்துள்ளார்கள். 1951–52-ம் ஆண்டில் இந்நகர வீதிகளில் மின்சார விளக்குகள் எரியும்.

இந்நகரின் மூலம் போகும் வெங்கடகிரி ரஸ்தாவுக்கு தார் போட நமது சர்க்கார் ரூ. 40,000 அநுமதித்துள்ளார்கள்.

## திருப்பத்தூர் முனிசிபாலிடி

உணவு உற்பத்திப் பெருக்க இயக்கத்துக்கு இங்குக் குப்பை, கூளங்களிலிருந்தும் மலத்திலிருந்தும் குப்பை உரம் உற்பத்தி செய்யப்படுகிறது. குறைந்த விலைக்கு இவ்வுரம் விவசாயிகளுக்கு விற்கப்படுகிறது. இதனால் முனிசிபாலிடிக்கு நஷ்டமிருந்தபோதிலும் இந்த உர உற்பத்தி நீடித்து நடந்துவருகிறது. இந்த உரத்தை விவசாயிகள் கழனிகளுக்குக் கொண்டுபோக 1950-ம்வருடு லாரி ஒன்று வாங்கப்பட்டது. இவ்வுர வுற்பத்தியால் முனிசிபாலிடிக்கு ஏற்படும் நஷ்டத்தை ஈடுபடுத்த சர்க்கார் 1 டன் குப்பை உரத்துக்கு 12 அணு விகிதம் கொடுத்துதவ சம்மதித்துள்ளார்கள்.

1950-ம்வருடு 4 ரஸ்தாக்களைப் பழுதுபார்க்கும் வேலை மேற்கொள்ளப்பட்டது. இதற்காக சர்க்கார் ரூ. 13,713 மான்யம் வழங்கச் சம்மதித்துள்ளார்.

முனிசிபல் உயர்தரப் பாடசாலை ரூ. 9,500 செலவில் விஸ்தரிக்கப்பட்டுள்ளது. இப்பாடசாலையில் நெசவுத் தொழில் கற்பிக்கப்படுகிறது. இத் தொழிலுக்குரிய பொருள்கள் வாங்குவதற்கும் பிரஜா பயிற்சிக்காகவும் சர்க்கார் இப் பாடசாலைக்கு ரூ. 250 மான்யம் வழங்கியுள்ளார்கள்.

இந்த முனிசிபாலிடியில் மின்சார வினியோகம்

முன்னேற்றம் அடைந்துள்ளது.

| | 1946. | 1950. |
|---|---|---|
| வீடுகளுக்கு மின்சார சப்ளை | 466 | 1153 |
| கைத்தொழில் ஸ்தாபனங்கள் | 11 கி. வா. | 26 கி.வா. |
| விவசாயம் | 3 | 7 |
| வீதி விளக்குகள் | 293 | 333 |

பொது சுகாதாரம்.—ராஜ்ய நிதியிலிருந்து வழங்கிய தொகையைக்கொண்டு பிளேக் தடுப்பு சிப்பந்திகளைத் தக்க சமயத்தில் நியமித்துப் பணியாற்றத் தொடங்கிய காரணத்தால் இந்நகரில் பிளேக் பரவாதபடி தடுக்கப்பட்டது. பிரசவ வசதிக்காக இன்னும் ஒரு மருத்துவ ஸ்திரீ நியமிக்கப்பட்டார்.

1950-ம் ஹரிஜனக் குடியேற்ற நிலத்தில், மாஜி-கள்ளருந்துவோருக்காக ஒரு ரேடியோ அமைக்கப்பட்டது. ரூ. 2,500 செலவில் நகரவாசிகளுக்கு அனுகூலமாகக் குடி தண்ணீர் கிணற்றில் பம்ப் செட் ஒன்று நிறுவப்பட்டது.

---

# ஹரிஜன முன்னேற்றம்

மக்களுள் பலதுறைகளிலும் தாழ்ந்துள்ள வகுப்பினரின்—முக்கியமாக ஷெட்யூல் வகுப்பு, மலைஜாதி ஆகியவற்றைச் சேர்ந்தவரின்—கல்வி, பொருளாதார உரிமைகளை விசேஷ கவனத்துடன் அபிவிருத்தி செய்து, சமூக அநீதி, மற்றும் அதுபோன்ற எல்லா இடர்ப்பாடுகளினின்றும் அவர்களை அரசாங்கம் பாதுகாக்கும்.

—இந்திய அரசியலமைப்பு.
ஷரத்து—46.

நமது பாரதியார் எதிர் காலத்தில் நம்மிந்திய நாட்டு மக்களிடை ஏற்படப்போகும் ஒற்றுமையைத் தீர்க்க தரிசனமாக எடுத்துரைத்தார். நமது நாட்டு மக்கள் எல்லோரும் சமம் என்பது உறுதியாச்சு என்று அவர் ஆணித்தரமாக வற்புறுத்திக் கூறியுள்ளார். அவருடைய வாக்குக்கிணங்க நமது ராஜ்ய சர்க்காரும், நாட்டு மக்களும் ஜாதி, மத வேற்றுமைகளை அறவே அகற்றி யாவரையும் ஒன்று படுத்தும் சட்டதிட்டங்களை ஏற்படுத்துவதில் சற்றும் சளைக்கவில்லை; ஆர்வமும் காட்டிவருகின்றனர்.

## ஹரிஜன மக்கள், பின் தங்கிய வகுப்பினர்

காந்தியடிகள் தம் குழந்தைகள் எதையும் குறைவாக நேசிக்கவில்லை. அவருக்குச் சில பிள்ளைகள் செல்லப் பிள்ளைகளாக இருந்தனர். ஹரிஜனங்கள் தாம் அச் செல்லப் பிள்ளைகள். தீண்டாமை ஒழிப்பும், ஹரிஜன க்ஷேமாபிவிருத்தியுமே காந்தியடிகளின் ஜீவியத் தொண்டுகளில் தலை சிறந்த இரு அம்சங்கள்.



சென்னை ராஜ்யத்தில் இந்து தேவாலயங்கள் யாவற்றிலும் அவர்கள் சென்று தரிசிக்க வசதி செய்யும் சட்டமும் பொது ஸ்தலங்கள், ஸ்தாபனங்கள் ஆகியவற்றில் அவர்களுக்கு இழைக்கப்பட்டுவந்த அநீதிகளை அகற்றும் சட்டமும் நிறைவேறி சென்னை ராஜ்யத்தில் அமலில் இருந்து வருகின்றன.

நமது சர்க்காரின் கிராம முன்னேற்றத் திட்டத்தின் கீழ் பொது உபயோகத்துக்காக, கிணறுகள் வெட்டும் வேலையில் ஜாதி இந்துக்களும் ஹரிஜனங்களும் ஒன்ருக உழைத்து வருகின்றனர்.

ஹரிஜன மாணவர்களுக்கும், பின் தங்கிய வகுப்பு மாணவர்களுக்கும் இலவச படிப்பு போதிப்பதற்கும், உபகாரச் சம்பளங்கள் வழங்குவதற்கும் சர்க்கார் ஏராளமான பணம் செலவு செய்து வருகிருர்கள்.

வீட்டு மனைகள் இல்லாத ஏழை ஹரிஜனங்களுக்கு மனை வழங்குவதற்கான திட்டமும் அமலில் இருந்து வருகிறது. ஹரிஜன நலத்துக்காக நமது சர்க்கார் செய்துவரும் செலவு வரவர உயர்ந்துகொண்டே வருகிறது.

1924-ம் ஞு ஹரிஜன நலத்துக்காக 8·7 லட்சம் ரூபாய் செலவாயிற்று. 1949–50ஆம் ஆண்டில், அவர்கள்

நலத்தை உத்தேசித்து நமது சர்க்கார் 71·21 லட்சம் ரூபா செலவு செய்துள்ளார்கள். நடப்பு வருஷத்தில் இதற்காக ரூ. 92·67 லட்சம் ஒதுக்கிவைக்கப்பட்டுள்ளது.

1924-ம் ஆண்டில் 14,500 ஹரிஜன மாணவர்களுக்குக் கல்வி போதிப்பதற்கான பள்ளிக்கூடங்கள் 500 இருந்தன. 1949-ம் ஆண்டில் அத்தகைய பள்ளிக்கூடங்களின் எண்ணிக்கை இரண்டரை மடங்கு உயர்ந்தது. மாணவர்களின் தொகையோ நான்கு மடங்கு அதிகமாயிற்று.

எனவே பாபுஜீயின் செல்லக் குழந்தைகளின் பராமரிப்புக்காக சென்னை சர்க்கார் போதிய கவனம் செலுத்தி வருகிறார்கள்.

**ராஜ்ய சர்க்காரின் சாதனைகள்**

இந்த ஜில்லாவில் சர்க்கார் ஹரிஜனங்களின் நலனைக் கருதி சாதித்துள்ள சாதனைகள் பலப்பலவாம். அவை பின் வருமாறு :

இந்த ஜில்லாவில் முக்கிய கிராமங்களில் ஹரிஜனங்களின் தேவையைக் குறித்து, ஹரிஜன நல அபிவிருத்தி சிப்பந்திகள் விசாரித்து அறிந்துகொண்டு அத்தேவைகளை நிறைவேற்றி வைப்பதில் கவனம் செலுத்தி வருகின்றனர்.

கிராமச் சேரியிலுள்ள ஹரிஜனங்களுக்குரிய சௌகரியங்களைச் செய்துவைக்க 5 வருஷத் திட்டமொன்று வகுக்க ஏற்பாடாயுள்ளது. ஹரிஜனங்கள் ஜில்லா கலெக்டருக்கு விண்ணப்பித்து கொள்ளும் முறையீடுகளும் கவனிக்கப்படுகின்றன. ஒவ்வொரு மாத இறுதியிலும், இதர சென்னை ராஜ்ய ஜில்லாக்களைப்போல் இந்த ஜில்லாவும் ஹரிஜன தினக்கொண்டாட்டத்தை விமரிசையுடன் நடத்திவருகிறது.

ஹரிஜனங்களுக்கு வீட்டுமனைகள் வழங்க இந்த ஜில்லாவில் 50 சேரிகள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன. நடப்பு வருஷத்தில் இச்சேரியிலுள்ள ஹரிஜனங்களுக்கு வழங்குவதற்காக நில ஆர்ஜித நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன.

இதுவரையில் நான்கு சேரிகளில் ஹரிஜனங்களுக்காக பாட்டைகள் அமைக்கப்பட்டு அவை முடியும் தறுவாயில் இருக்கின்றன. அவர்களுக்குச் சுடுகாடுகளும், இடுகாடுகளும் பிரத்தியேகமாக அமைக்கப்பட்டு வருகின்றன.

இந்த ஜில்லாவில் 151 ஹரிஜனப் பாடசாலைகள் உள்ளன. அவற்றுள் புதிதாக நிறுவப்பட்ட 10 பாடசாலைகளும் சேர்ந்துள்ளன. இப்பாடசாலைகளில் 341 ஆசிரியர்கள் கல்விபோதிக்க நியமிக்கப்பட்டுள்ளனர். இப்பாடசாலைகளில் வாசிக்கும் மாணவ மாணவிகளின் மொத்த எண்ணிக்கை 10,576. இப்பாடசாலை மாணவர்களுக்கு, பாய்முடைதல், பைகள் பின்னுதல், டேப் நெய்தல், நாரிலிருந்து கயிறுதிரித்தல் முதலிய கைத்தொழில்களில் பயிற்சியளிக்கப்படுகிறது.

ஹரிஜன, பின்தங்கிய வகுப்பு மாணவ, மாணவிகளுக்கும் இலவசக்கல்வியும், 'ஸ்காலர்ஷிப்'பும் அளிக்கப்படுகின்றன. அவர்களுக்கு 'ஸ்காலர்ஷிப்' வழங்க ரூ. 13,864–12–0 ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது.

இந்த ஜில்லாவில் 7 ஹரிஜன ஹாஸ்டல்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றின் செலவுக்காக ரூ. 25,650 ஒதுக்கப்பட்டிருக்கிறது.

இந்த ஜில்லாவிலுள்ள ஹரிஜனப் பாடசாலைகளில் வாசித்துவரும் மாணவ, மாணவிகளுக்குப் பகல் போஜனம் இலவசமாக அளிக்க சர்க்கார் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

குடி தண்ணீர்க்கிணறுகள் சேரிகளில் தோண்டப்பெற்று வருகின்றன. புதியகிணறுகள் தோண்டவும் பழையகிணறுகளைப் பழுது பார்க்கவும் இதுவரையில் சர்க்கார் ரூ. 20,255 செலவு செய்துள்ளனர்.

ஜில்லா ஹரிஜன நல அபிவிருத்திகமிட்டி மூன்றுமாதங்களுக்கொருமுறை கூட்டம் நடத்தி, ஹரிஜனங்களின் சௌகரியத்தைக் குறித்து ஆலோசிக்கின்றது.

# தொழில் அபிவிருத்தி

---

**விவசாயம், கைத்தொழில் அல்லது இதர துறைகளில் உழைக்கும் எல்லாத் தொழிலாளர்களுக்கும் வேலை, ஜீவனத்துக்கேற்ற ஊதியம், கண்ணிய வாழ்க்கைத் தரத்துக்கேற்ற வேலை நிபந்தனைகள், சமூக கலாசார வசதிகள், ஓய்வின் பூரண நுகர்ச்சி முதலிய சௌகரியங்களைத் தகுந்த சட்டம் அல்லது பொருளாதார அமைப்பின் மூலம் அளிக்க அரசாங்கம் முயலும்.**

—இந்திய அரசியல் அமைப்புச் சட்டம்.
ஷரத்து—43.

ஒரு நாட்டின் பொருளாதார விருத்திக்கு இன்றியமையாதவை விவசாயமும் கைத்தொழிலும் ஆகும். விவசாயம் முக்கியதொழிலாக அமைந்துள்ள இந்நாட்டில் கைத்தொழில் அபிவிருத்திக்கான வழி வகைகள் கோலப்படவில்லை. அது விஷயமாய் அந்நிய ஆட்சியினரும் சிரத்தை ஒன்றும் எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. இப்போது நமது சர்க்கார் அதைக்குறித்து அக்கறைக்காட்டுவதுமல்லாமல் கைத்தொழிலில் ஈடுபட்டுழைக்கும் மக்களின் நிலையை உயர்த்தவும் கங்கணம்கட்டி ஆவன செய்துவருகிறார்கள்.

## கைத்தொழில் அபிவிருத்தி

நமது நாட்டில் விவசாயம் நீங்கலாக இதரகைத்தொழில்கள் அவ்வளவாக விருத்தியடையவில்லை. கைத்தொழில் அபிவிருத்தியின்மையால் இங்குப் பொருளாதாரநிலைமை சீர்திருந்துவது வெகுகடினமாய் இருந்துவந்தது. அதனால், இந்தியாவின் மத்தியசர்க்காரும் மாகாணசர்க்காரும் இரண்டாம் உலகயுத்தம் முடிந்தபிறகு இந்நாட்டில் கைத்தொழில்கள் அபிவிருத்திக்கான விஷயங்களைக்குறித்துக் கவனிக்கலாயினர்.

இந்நாட்டில் தாதுப்பொருள்கள் ஏராளமாய்க் கிடைக்கின்றன வென்றும், அவற்றைக்கொண்டு பலதரப்பட்ட கைத்தொழில்களை அபிவிருத்தி செய்யக்கூடுமென்றும் தெரியவந்துள்ளது.

தாதுப்பொருள்களைக் குறித்த ஆராய்ச்சி நடத்த சர்க்கார் தாதுப்பொருள் சோதனைப் பகுதி நிலையமொன்றையும், அனந்தபூரில் எண்ணெய், கொழுப்பு முதலியவைகளைக் குறித்து ஆராய்ந்தறிய எண்ணெய் நுணுக்க ஆராய்ச்சி ஸ்தாபனத்தையும் நிறுவியுள்ளார்கள்.

ஜவுளி, சர்க்கரை, செமெண்ட், வனஸ்பதி, ரசாயன வஸ்துக்கள், யந்திரங்களின் உபகரணங்கள் முதலியவை உற்பத்தி செய்ய வழிவகைகள் கோலபட்டு வருகின்றன. கோயமுத்தூரில் 2ம், மலையாளத்தில் 2ம், குண்டூரில் 1ம், பெல்லாரியில் 1 மாக 6 புதிய ஜவுளி ஆலைகள் ஆரம்பித்து வைக்கப்பட்டுள்ளன. இந்த ராஜ்யத்தில் ஏற்கெனவே நடைபெற்று



## கைத்தொழிலும், மதுவிலக்கும்



ஜமக்காளம் நெய்தல்



கடலை உடைத்தல்



ஆலையில் நூல்



வெல்ல உற்பத்தி



கள் குடியை விட்டோர்க்குக் களியாட்டம்

வரும் 4 ஆலைகளில் நூல் உற்பத்தி அதிகமாகிஇருக்கிறது.

### சிமிட்டி உற்பத்தி

நமது ராஜ்யத்தில் சிமிட்டி உற்பத்தித் தொழிற் சாலைகள் நிறுவி சிமிட்டி உற்பத்தியைப்பெருக்க ஏற் பாடு செய்யப்பட்டுவருகிறது. வருஷந்தோறும் 1,00,000 டன் சிமிட்டி உற்பத்திசெய்யும் தொழிற்சாலை ஒன்றை ராயலசீமாவில் நிறுவ சர்க்கார் ஆலோசித்து வருகின்றனர்.

### சர்க்கரை உற்பத்தி

சென்னை ராஜ்யத்தில் 13 சர்க்கரை உற்பத்திச்சாலைகள் இருக்கின்றன. அவற்றின்மூலம் 52,000 டன் சர்க்கரை உற்பத்திசெய்யப்படுகிறது. 5 தொழிற்சாலைகள் கரும்பிலி ருந்து அதிக சாறுபிழிந்து சர்க்கரை உற்பத்தியை மிகுவிக்க அநுமதிக்கப்பட்டுள்ளன. இன்னும் 10 தொழிற்சாலை களைப் புதிதாக நிறுவ அநுமதி அளிக்கப்பட்டுள்ளது.

இந்த விஸ்தரிப்பு திட்டத்தால் சென்னை ராஜ்யத்தில் வருஷந்தோறும் 90,000 டன் சர்க்கரை உற்பத்தியாகும்.

புதிதாக ஆரம்பித்துவைக்கப்பட்ட கரும்பாலைகளுள் மதுரையிலுள்ள கரும்பாலை சர்க்கரை உற்பத்திசெய்ய ஆரம்பித்துவிட்டது.

### வனஸ்பதி உற்பத்தி

10 வனஸ்பதி உற்பத்திச்சாலைகள் அமைக்க சர்க்கார் அங்கீகாரம் அளித்துள்ளனர். இச்சாலைகளில் தண்டை யார்ப்பேட்டை, திருச்சிராப்பள்ளி, கர்நூல், குண்டூர், சித் தூர் ஆகிய இடங்களில் நிறுவப்பட்டுள்ள வனஸ்பதி உற் பத்தித் தொழிற்சாலைகள், ஏற்கெனவே வனஸ்பதி உற் பத்திசெய்ய ஆரம்பித்துவிட்டன.

காகிதம், மோட்டார் யந்திரங்கள், மர ஆணிகள், பட்டு ஆகியவற்றை உற்பத்திசெய்வதற்கான விஷயங்களைப்பற்றி சர்க்கார் தீர ஆலோசித்து வருகிறார்கள்.

இரும்பு, எஃகு, மாக்னீசியம், அலூமினியம், அம்மோ

னியம் பாஸ்பேட், மின்சாரஉற்பத்தி ஆகியவற்றை சென்னை ராஜ்யத்தில் ஏற்படுத்தவேண்டுமென்று நமது சர்க்கார் இந்திய சர்க்காருக்கு விண்ணப்பித்துக் கொண்டிருக்கிறார்கள்.

கயிறு, சோப்பு, சுரு ஈரல் எண்ணெய், பட்டு, காகிதம், பீங்கான் முதலியவைகளை உற்பத்திசெய்ய, நமது ராஜ்யத்தில் பல இடங்களில் நமது சர்க்கார் மாதிரித் தொழிற்சாலைகள் நடத்திவருகிறார்கள்.

இப்போதுள்ள, இனிமேல் நிறுவப்படும், தொழிற்சாலைகளுக்கு நெடுங்காலக்கடன் கொடுத்துதவ நமது சர்க்கார் 1949-ம் ஆண்டில் "மெட்ராஸ் இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷன் லிமிடெட்" என்னும் ஸ்தாபனத்தை நிறுவியுள்ளார்கள். இதற்கு ஏற்பட்டுள்ள மூலதனம் 2 கோடி ரூபாயாகும். அந்த ஸ்தாபனத்தின்மூலம் பல கைத்தொழிற்சாலைகளுக்கு 35 லட்சம் ரூபாவரையில் கடன் வழங்கப்பட்டுள்ளது. சர்க்கார் சில கைத் தொழில்களுக்கு மான்யமும் வழங்கிவருகிறார்கள்.

## தொழிலாளர் நலன்

நமது ஜனநாயக சர்க்கார் சென்னை ராஜ்யத்திலுள்ள தொழிலாளர் நலனை உத்தேசித்து, கைத்தொழில் சச்சரவு சட்டத்தின் கீழ், தொழிலாளருக்கும் நிர்வாகஸ்தருக்குமிடையே ஏற்படும் வேற்றுமைகளைத் தீர்த்துவைக்க கைத்தொழில் டிரிபியூனல்களை நியமித்துள்ளார்கள்.

இந்திய தொழிற்சாலை சட்டம் திருத்தியமைக்கப்பட்டது. அதன் பிரகாரம் தொழிலாளர்களுக்குத் தினந்தோறும் 8 மணிநேர வேலை, ஒருவாரத்துக்கு 48 மணிநேர வேலை, சம்பளத்துடன் கூடிய விடுமுறைகள், ஒருவருஷத்துக்கு 36 நாள் ரஜா [(சம்பளத்துடன்) வார லீவ் நாட்கள் நீங்கலாக] முதலிய சௌகரியங்கள் கிடைத்துள்ளன. அநேக தொழிற்சாலைகளில் தொழிலாளர் சம்பளமும் பஞ்சப்படியும் உயர்த்தப்பட்டுள்ளன.

இந்த ஜில்லாவில், பல்வேறு வகுப்பினர் பீடி

சுற்றுதல், தோல் பதனிடுதல் முதலிய கைக்தொழில்களில் ஈடுபட்டு வருகின்றனர். தோல்பதனிடும் தொழிற்சாலை களில் சுமார் 12,000 ஹரிஜனங்கள் வேலைசெய்து வருகின்றனர்.

சுமார் 30,000 தொழிலாளர் பீடிசுற்றும் தொழிலில் ஈடுபடுகின்றனர். 1949-ம் வருஷம் இத்தொழிலாளரின் குறைபாடுகளை நீக்க மத்தியஸ்த கோர்ட்டு நியமிக்கப்பட்டு தீர்ப்பு அளித்தது. ஏனைய கைத்தொழில்கள் சம்பந்தமாய் தொழில் அதிகாரி சுமார் 262 வழக்குகளைத் தீர்த்து வைத்துள்ளார்.

## தொழிற்சாலைகளுக்கு மான்யம்

இந்த ஜில்லாவில் நமது சர்க்கார் கீழ்க்கண்ட தொழிற்சாலைகளுக்கு மான்யம் வழங்கியுள்ளனர் :—

சுதர்சன் ஆயில் மில்ஸ், லிமிடெட், காட்பாடி ; கைத்தொழில்—வனஸ்பதி ; மான்ய உதவி—ரூ. 10,00,000.

ஸ்ரீவிஜயலக்ஷ்மி டெக்ஸ்டைல்ஸ், குடியாத்தம் ; கைத்தொழில்—பட்டு, மான்ய உதவி ரூ. 24,000.

ராமேஸ்வரி மில்ஸ், லிமிடெட், குடியாத்தம் ; கைத்தொழில்—ஜவுளி, பட்டு ; மான்ய உதவி—ரூ. 5,00,000.

சென்னை வெஜிடபிள் ஆயில்ஸ், லிமிடெட், ராணிப்பேட்டை; கைத்தொழில்—எண்ணெய் சுத்தி செய்தல் ; மான்ய உதவி—ரூ. 90,000.

நமது சர்க்கார் சில தொழில் நுணுக்கப் பாடசாலைகளுக்கு மான்யம் வழங்கியுள்ளார்கள்.

அஞ்சுமான் இன்டஸ்டரியல் ஸ்கூல், வேலூர்; 1946–47வருஷத்தில் ரூ. 4,444, 1947–48வருஷத்தில் ரூ. 3,672 ; 1948–49வருஷத்தில் ரூ. 3,666 ; 1949–50வருஷத்தில் ரூ. 2,575.

அஞ்சுமான் இன்டஸ்ட்ரியல் ஸ்கூல், மேல்விஷாரம் ; 1946–47வருஷத்தில் ரூ. 5,967, 1947–48வருஷத்தில் ரூ. 3,781, 1948–49வருஷத்தில் ரூ. 3,142, 1949–50வருஷத்தில் ரூ. 2,608.

அஞ்சுமான் இன்டஸ்ட்ரியல் ஸ்கூல், திருப்பத்தூர் ; 1946–47வருஷத்தில் ரூ. 1,500, 1947–48வருஷத்தில் ரூ. 1347

1948–49ஆம் வருஷத்தில் ரூ. 1,281, 1949–50ஆம் வருஷத்தில் ரூ. 1,000.

பாஸ்கோ இன்டஸ்ட்ரியல் ஸ்கூல், வேலூர்; 1946-47 ஆம் வருஷத்தில் ரூ. 2,160, 1947–48ஆம் வருஷத்தில் ரூ. 2,050, 1948–49ஆம் வருஷத்தில் ரூ. 2,408, 1949–50ஆம் வருஷத்தில் ரூ. 3,080.

கருமாரவேலை, தச்சுவேலை, மண்பாண்டவேலை ஆகியவற்றைக்குறித்து கலசப்பாக்கம் பிர்க்காவில் மும்முறை பயிற்சியளிக்கப்பட்டது. கருமாரவேலைக்கு 16 மாணவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு அவர்கள் அனைவரும் பரீட்சைக்கு உட்கார்ந்தார்கள். பரீட்சையில் தேறியவர்களுக்குத் திறமை சர்டிபிகேட்டுகள் வழங்கப்பட்டன.

தச்சுவேலைக்கு 18 மாணவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்களில் 17 நபர்களுக்குச் சர்டிபிகேட்டுகள் வழங்கப்பட்டன.

மண்பாண்ட வேலைக்கு 13 மாணவர் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அவர்களுள் 8 பேர்களுக்கு சர்டிபிகேட்டுகள் வழங்கப்பட்டன.

இந்த ஜில்லாவிலுள்ள குடிசைக் கைத்தொழிலாளரின் உற்பத்தி வேலைக்காக 1949-ம் வருஷம் செப்டெம்பர் மீ 1உ யிலிருந்து, 1950-ம் வருஷம் டிசம்பர் மீ 31உ வரையில் 198 டன் எடையுள்ள இரும்பும், எஃகும் சப்ளை செய்யப்பட்டன.

# வாக்குரிமை

**மக்கள் சபைக்கும், ஒவ்வொரு ராஜ்யத்தின் சட்ட சபைக்கும், வயது வந்தோர் வாக்குரிமை என்னும் அடிப்படையின் கீழ் தேர்தல் நடைபெறும்.**

—இந்திய அரசியல் அமைப்பு.
ஷரத்து—326.

பெற்ற சுதந்திரத்தைப் பேணிக்காத்தல் இந்திய மக்களின் இப்போதைய முக்கியப் பொறுப்பாகும். உண்மையான ஜனநாயக முறை எந்த அளவுக்கு நம் நாட்டில் ஸ்தாபிக்கப்படுகிறதோ, அதற்குத் தகுந்தபடி சுதந்திரமும் நிலைக்கும்; சுய ஆட்சியும் நன்கு நடைபெறும். இந்த உயர்ந்த தத்துவங்களை மனதிற் கொண்டே, இந்திய ஜனத் தலைவர்கள் அரசியல் நிர்ணய சபை நிறுவி, சுதந்திர இந்திய ஜனநாயக அரசாங்க அமைப்புக்கான சட்டங்களை நிறைவேற்றினர்.

1950-ம் வருஷம் ஜனவரிமீ 26-ந் தேதியன்று இந்த அரசியல் சட்டம் நிறைவேற்றப்பட்டது. மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற, மக்கள் பிரதிநிதிகளைக்கொண்ட, மக்கள் சர்க்கார் நிர்வாகம்தான் அந்த அரசியல் சாசனத்தின்

நோக்கமாகும். எனவே மக்களுக்குத்தான் இங்கு பூரண அதிகாரம் உண்டு.

ஜனநாயக அரசியல் அமைப்புக்குள்ள பொறுப்பு அதிகம். இதே மாதிரி ஜனநாயக ஆட்சி விரும்பும் மக்களுடைய பொறுப்பும் அதிகமாகியுள்ளது. சுதந்திரக் குழந்தை, ஜனநாயகத் தொட்டிலில் தவழ்ந்து வளர, வாக்குரிமை சரியான சந்தர்ப்பமளிக்கிறது.

## துணிச்சலான தீர்மானம்

நம் தேசத் தலைவர்கள் எடுத்தவுடனேயே வயது வந்தோர் எல்லோருக்கும் ஓட்டுரிமை கொடுக்கத் துணிந்தனர். வயது வந்தோர் ஓட்டுரிமை தேச ஆட்சியில் மகத்தான சக்தி வாய்ந்த தென்பதையும் அதனுல் ஏற்படும் நன்மை தீமைகளையும் நம் தலைவர்கள் தெரிந்து கொள்ளாமலில்லை. ஆனுல் ஜனநாயக சர்க்காரென்ருல், அதில் மக்களில் பெரும்பாலாரின் உண்மைப் பிரதிநிதிகள் நிர்வாகம் நடத்த வேண்டும். இந்த ஒரே நோக்கத்தில்தான், நம் தலைவர்கள் மிகவும் தைரியத்துடன் இம் முறையை அனுஷ்டிக்க முன் வந்திருக்கிருர்கள்.

ஜனநாயக மென்பது மக்களின் சர்க்கார். மக்கள் எல்லோரும் சேர்ந்து ஆட்சி புரியவேண்டும். அப்படிச் செய்வது நடைமுறையில் சாத்தியமானதல்ல. எனவே, மக்கள் தங்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அவர்கள்மூலம் ஆட்சி நடத்துவதென்ற சம்பிரதாயம் ஏற்படுத்தப்பட்டுள்ளது. சட்டசபை அங்கத்தினர்களை மக்கள் தேர்ந்தெடுத்து விடுகிருர்கள். அச் சட்டசபை அங்கத்தினர்களில் பெரும்பாலாரைக் கொண்ட அரசியல் கட்சியினர், தங்கள் தலைவரைத் தேர்ந்தெடுப்பர். அத் தலைவர் ராஜ்யத்தின் முதல் மந்திரியாக நியமிக்கப்படுவார். ராஜ்ய நிர்வாகத்தில் தமக்கு உதவிபுரியச் சிலரைத் தம் சக மந்திரிகளாய் நியமிக்கவேண்டுமென்று, முதல் மந்திரி, ராஜ்ய கவர்னருக்கு சிபாரிசு செய்வார். இம்மாதிரி மந்திரி சபையமைக்கப்படும். மந்திரிகள் சட்ட சபைக்கும், சட்ட

சபை மக்களுக்கும் பொறுப்பாவர். இந்தப்பார்லிமென்டரி முறைகள் பூராவும் இந்திய அரசியல் சட்டத்தில் விவரமாய் நிர்ணயிக்கப்பட்டுள்ளன.

## வாக்காளர் தொகை அதிகரித்தல்

இந்த நியதி மூலம் 5 வருஷத்திற்கு ஒரு முறை பொதுத்தேர்தல் இன்றியமையாததாகிறது. தேர்தலில் வாக்காளராவதற்குச் சில தகுதிகள் நிர்ணயிக்கப்பட்டுள்ளன. அத்தகைய யோக்கியதாம்ச நிபந்தனைகளின்படி 1920-ம் வருஷம் ஜனத்தொகையில் 2 அல்லது 3 சதவிகிதமும் 1937-ல் 14 சதவிகிதமும் வாக்காளரானார்கள். இப்பொழுது வயது வந்தோர் ஓட்டுரிமை வழங்கப்பட்டிருக்கிறது. அதாவது, ராஜ்ய மக்களில் 21 வயது பூர்த்தியானவர்கள் எல்லோரும் வாக்காளர்கள்தான். இந்தியப் பிரஜையாக இருக்கவேண்டும், 21 வயது பூர்த்தியாக வேண்டுமென்பதுதான் வாக்காளராவதற்கு நிர்ணயிக்கப்பட்டிருக்கும் முக்கிய யோக்கியதாம்சங்கள். இவற்றின்படி ஜனத்தொகையில் ஏறக்குறைய பாதிப்பேர் வாக்காளராகிறார்கள்.

சென்னை ராஜ்யத்தின் ஜனத்தொகை 1951-ம் வருஷத்து ஜன சங்கியைப்படி 56,952,332. அதில் ஆண்கள் 28,413,661. பெண்கள் 28,538,671. மொத்த ஜனத்தொகையில் ஆண்கள் 49·9 சத விகிதமும் பெண்கள் 50·1, சத விகிதமும் இருக்கிறார்கள். 1941-ம் வருஷத்து கணக்குப்படி ராஜ்யத்தின் ஜனத்தொகை 49,847,508. எனவே சென்ற பத்து வருஷங்களில் சென்னை ராஜ்யத்தின் ஜனத்தொகை 7,104,824 அதிகரித்திருக்கிறது. 1941-ல் ஒரு சதுர மைலுக்கு 390 பேர்கள் வசித்தார்கள்; 1951-ல் 446 பேர் வசிக்கிறார்கள்.

1951-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 28 நாட்களிலும், சர்க்காரால் நியமிக்கப்பட்ட ஜனசங்கியை கணக்கெடுப்பவர்கள் வேலை செய்தார்கள். இதற்கு முன்னால் நடைபெற்ற ஜன சங்கியைக் கணக்கெடுப்பு மாதிரியில்லாமல், இக்

கணக்கெடுப்பில் சர்க்காரால் அதிக கவனம் செலுத்தப் பட்டு, அதிகப்படியான புள்ளி விவரங்களும் தயாரிக்கப் பட்டிருக்கின்றன.

### பிரதிநிதிகள் எண்ணிக்கை

தற்போதுள்ள வாக்காளர் ஜாப்தாக்களின்படி சென்னை ராஜ்யத்தில் 271 லட்சம் ஓட்டர்கள் இருக்கிறார்கள். இவர்கள் நம் ராஜ்ய சட்டசபைக்கு 375 அங்கத்தினர்களையும், மத்திய சட்டசபையான டெல்லி பார்லிமென்டில் மக்கள் சபைக்கு நம் ராஜ்யப் பிரதிநிதிகளாய் 75 அங்கத்தினர்களையும் தேர்ந்தெடுக்க வேண்டும்.

சென்னை மேல் சபையில் மொத்தம் 72 அங்கத்தினர்கள் இருப்பார்கள். அவர்களில் ஸ்தல ஸ்தாபனங்களின் மூலம் 24 பேரும், பட்டதாரித் தொகுதியிலிருந்து 6 பேரும், ஆசிரியர் தொகுதியிலிருந்து 6 பேரும் தேர்ந்தெடுக்கப்படுவர். சென்னை ராஜ்ய கீழ்ச் சட்டசபை அங்கத்தினர்கள் எல்லோரும் சேர்ந்து, தனியாக 24 பேரை சென்னை மேல் சபைக்குத் தேர்ந்தெடுப்பார்கள். இவர்களைத் தவிர, மேன்மைதங்கிய கவர்னர் அவர்கள் 12 அங்கத்தினர்களை நியமனம் செய்வார்.

டெல்லி பார்லிமென்டின் மேல் சபையில் மொத்தம் 205 அங்கத்தினர்கள் இருப்பர். 'கவுன்ஸில் ஆப் ஸ்டேட்' எனப்படும் அந்தச் சபையில், சென்னை ராஜ்யத்தின் சார்பாக 27 பேர் அங்கம் வகிப்பார்கள்.

### தவறான முறைகளைத் தவிர்க்க

பொதுவாக, தேர்தல் காலங்களில், இறந்தவர்கள் வந்து ஓட்டுப் போடுவதுதான் மிகவும் விசித்திரமானது. அபேட்சகர்களின் ஆட்கள் இதற்கென்று விசேஷ கவனம் செலுத்தி, ஜாப்தாவிலுள்ள பெயர்களில் இறந்துபோனவர்களுக்குப் பதில் நபர்கள் தயார் செய்யக்கூடும். அவர்கள் வந்து இறந்து போனவர்கள் பெயர்களைத் தம்மதென்று சொல்லி ஓட்டுப்போட்டு விட முடியும். இதைத்

தடுப்பதற்கு, வரப்போகும் தேர்தலில் ஒரு அடையாள மிடும் முறையைக் கையாளவேண்டுமென்று யோசனை கூறப்பட்டிருக்கிறது. அதாவது ஒருவர் ஓட்டுப் போட வரும்பொழுது அவருடைய விரலில் ஒருவித மை பூசப் படும். அந்த மை குறைந்தது ஒரு வாரம் அழியாம லிருக்கும். எனவே, எவரும் தப்பான பெயரில் மீண்டும் ஓட்டுப் போடமுடியாது.

## அகில இந்திய ரீதியிற் பரிசீலனை

சென்னை ராஜ்யத்தில் தேர்தல் தொகுதிகள் பிரிப்பதில் ஜில்லா எல்லைகளை மட்டும் கூடுமானவரை அப்படியே வைத்துக்கொள்ள வேண்டுமென்றும், முன்னேற்ற மில்லாத வகுப்பினர்களுக்கு ஸ்தானம் ஒதுக்கப்படும் தொகுதிகள் மட்டும் இரட்டை அங்கத்தினர் தொகுதி களாகவும், மற்றைய தொகுதிகள் ஒற்றை அங்கத்தினர் தொகுதிகளாகவே யிருக்கவேண்டுமென்றும், சென்னை சர்க்கார் சிபாரிசு செய்தனர். அவ் விஷயம் சென்னை அசம் பிளியிலும், கவுன்சிலிலும் நன்கு விவாதிக்கப்பட்டு சர்க் காரின் சிபாரிசு அங்கீகரிக்கப்பட்டது.

இது பற்றிய எல்லா விஷயங்களையும் அகில இந்திய ரீதியில் சரிவர ஆராய்ந்து, இத் தேர்தலை நடத்த, பிரத்தி யேகமாய் ஒரு தேர்தல் கமிஷனரை மத்திய சர்க்கார் நியமித்திருக்கிறார்கள். அவர் தேர்தலின் அம்சங்கள் ஒவ்வொன்றையும் தாமே கவனித்து தக்க ஏற்பாடுகள் செய்து வருகிறார். தேர்தல் தொகுதிகள் நிர்ணயித்தல், தேர்தல் நடத்துவதற்கான சாமான்களைத் தயாரித்தல், முதலியன நடைபெற்று வருகின்றன.

சென்னை ராஜ்யத்தின் வாக்காளர் ஜாப்தா தயாரிப் பதற்கு 29 லட்சம் ரூபாய் செலவாயிருக்கிறது. காகித விலை மட்டும் 6 லட்சம். தேர்தல் நடத்த 3 லட்சம் 'பாலட்' பெட்டிகளுக்குமேல் வேண்டியிருக்கின்றன. அவைகள் எஃகு பெட்டிகளாகவே யிருக்கவேண்டுமென்று தீர் மானிக்கப்பட்டிருக்கிறது. சராசரி ஒரு பெட்டிக்கு 6 ரூபாய்

விலையாகிறது. எனவே அந்த வகைக்குக் குறைந்தது 20 லட்சம் செலவாகும். இன்னும் தேர்தல் ஸ்தலங்கள், அதற்கு வேண்டிய இதர சாமான்கள், காவல் கட்டுப்பாடு களெல்லாம் இருக்கின்றன.

### அஸ்திவார மிடுவதிலும் கூட்டு முயற்சி

இதற்கிடையில், அரசியல் கட்சியினர் பலர் தங்கள் கருத்துக்களை அறிவிக்கவும் வாய்ப்பளிக்கப்பட்டது. அரசாங்கம் இதற்கென பல்வேறு அரசியல் கட்சியினரை நேரில் அழைத்து விரிவான ஆராய்ச்சி நடத்தினர். நம் ராஜ்யத்திலுள்ள அரசியல் கட்சியினர் பலரும் அதில் கலந்து கொண்டது பாராட்டத்தக்கதாகும். ஜனநாயக வளர்ச்சிக்கு இத்தகைய காரியங்கள் எவ்வளவு அவசியமானவை என்பதைப்பற்றி அதிகம் கூற அவசியமில்லை.

### பொதுஜனத் தொடர்பு

ஜனநாயகத் தன்மையில் வளரும் அரசாங்கம், அவ்வப்போது தன்னுடைய அலுவல்கள் சம்பந்தமாகவும், பொது நல விஷயங்கள் சம்பந்தமாகவும், பொதுமக்களுடன் உறவு பூண்டு, அவர்களுக்குத் தேவையான விவரங்களை அறிவிக்க வேண்டியது அவசியம். இத் துறையில் செய்தி இலாகா தன்னால் இயன்ற அளவு தொண்டாற்றி வந்துள்ளது.

கவுன்சிலுக்கு மொத்தம் 72 அங்கத்தினர்கள். அவர்களில் சர்வ கலாசாலை பட்டதாரிகள், உபாத்தியாயர்கள், தொகுதிகளிலும், ஸ்தலஸ்தாபன தொகுதிகளிலும் தேர்தலைத் தபால்மூலம் நடத்த நம் சர்க்கார் சிபார்சு செய்திருக்கின்றனர். கவுன்சிலுக்கு சட்டசபை (அசெம்பிளி) யால் தேர்ந்தெடுக்கப்படவேண்டிய அங்கத்தினர்கள் 24 பேர்.

### ஜில்லா விவரங்கள்

சமீபத்தில் நடந்த ஜனசங்கியை விவரத்தின்படி வட ஆற்காடு ஜில்லாவில் 2,862,155 மக்கள் வசித்து வருகிறார்கள். இந்த ஜில்லாவில் 1949-ம் ஆண்டில் வசித்து வந்த

மக்களின் மொத்த எண்ணிக்கை 2,577,540 ஆகும். இப் பத்து வருஷ இடைக்காலத்தில் ஷெ ஜில்லாவில் 284,615 மக்கள் அதிகமாக உள்ளனர். அதாவது அதிகமக்களின் எண்ணிக்கை 11 சத விகிதமாகும்.

வட ஆற்காடு ஜில்லாவிலுள்ள 2,862,155 மக்களுள் 1,430,909 பேர் ஆண்பாலார்; அவர்கள் வட ஆற்காடு ஜில்லாவின் மொத்த ஜனத் தொகையில் 50 சத விகிதத்தினர்; 1,431,246 பேர் பெண் மக்கள். அவர்கள் ஷெ ஜில்லாவின் மொத்த ஜனத் தொகையில் 50 சதவிகிதத்தினர்.

ஜில்லாவைக் குறித்த வாக்காளர் ஜாபிதாவின்படி 13,27,642 பேர் வாக்களிக்கும் உரிமை வாய்ந்தவர்களென்று கணிக்கப்பட்டிருக்கிறது. ராஜ்ய அசெம்பிளியில் இந்த ஜில்லாவுக்குரிய தொகுதிகள் 15; மத்திய மக்கள் சபைக்கு இந்த ஜில்லாவின் பிரதிநிதிகள் 4.

---

# அமைதியும் அபிவிருத்தியும்

---

*தேசீய வாழ்க்கை சம்பந்தமான எல்லா ஸ்தாபனங்களிலும், சமூக பொருளாதார, அரசியல், நீதி முறை பொருந்தி விளங்கு தற்குரிய ஒரு சமுதாயத்தை ஏற்படுத்தி, அதை மிகத் திறமையுடன் பாதுகாக்கும் வகையில் மக்களின் நலத்தைப் பேணி வளர்க்க அரசாங்கம் முயற்சி செய்யும்.*

—இந்திய அரசியல் அமைப்பு.
ஷரத்து—36.

சென்னை ராஜ்யம் இந்தியாவிலுள்ள ஏனைய ராஜ்யங்களைக் காட்டிலும் சில விஷயங்களில் முற்போக்குடையதாய் விளங்குகிறது. மக்கள் மதுவருந்தி மதிகேடராய்த் தங்களுக்கும் தங்கள் நாட்டுக்கும் பயனற்றுத்திரியும் அலங்கோலக் காட்சியை அடியோடு தொலைக்கவும் நமது ராஜ்ய மாதர் ஆண் மக்களுடன் சரி நிகர் சமானமாய் வாழவும், நமது ராஜ்யத்தின் கலாசாரப் பண்பாடு நிலையழிந்து போகாதிருக்கவும் முறையே மது விலக்கு, மாதர் நல இலாகா, ஆஸ்தான கவிஞர் நியமனம் முதலியவற்றைப் புகுத்தி இதர ராஜ்யங்களுக்கு வழிகாட்டி நிற்கிறது.

## மதுவிலக்கு

1939-ம் ஆண்டு இந்த ஜில்லாவில் முதன் முதலாக மது விலக்கு ஆரம்பித்து வைக்கப்பட்டது. ஆனால் ஆலோசக சர்க்கார் காலத்தில் அதாவது 1944-ஆம் ஆண்டில் அது கைவிடப்பட்டது. நமது ஜனநாயக சர்க்கார் அதை மீண்டும் 1946-ம் ஆண்டு அக்டோபர் மீ 1உ யிலிருந்து 8 ஜில்லாக்களில் அமல் நடத்தத் தொடங்கினர். அவ்வெட்டு ஜில்லாக்களில் வட ஆற்காடு ஜில்லாவும் ஒன்றாகும்.

மதுவிலக்கை அமல் நடத்த ஆரம்பித்தவுடனே, வேலை யிழந்த மாஜி-கள்ளிறக்குவோருக்கு வேலை தேடித் தருவதி லும், மாஜி-குடியர்களுக்கு மாற்றுக்களையும் பொழுது போக்குக்கு விசேஷ விளையாட்டுக்களையும் ஏற்படுத்து வதிலும் நமது சர்க்கார் சிரத்தைக் எடுத்து கொள்ள லாயினர்.

மதுவிலக்கு அமல் நடத்தப்படுவதன் காரணமாக, 2,000-க்கு மேற்பட்ட மாஜி-கள்ளிறக்குவோர் வேலை யிழந்து துன்பத்துக்குள்ளாயினர். இவர்கள் வேலைசெய்து ஜீவிப்பதற்கு நமது சர்க்கார் இந்த ஜில்லாவில் வெல்ல உற்பத்திக் கூட்டுறவு சங்கங்களை அமைத்தனர். அச் சங்கங்களின் மூலம் மாஜி-கள்ளிறக்குவோருக்கு லைசென்ஸ் கள் வழங்கப்பட்டன.

## வெல்ல உற்பத்திச் சங்கங்கள்

இவ்வாறு சர்க்கார் நிறுவிய வெல்ல உற்பத்திக் கூட் டுறவு சங்கங்களின் சாதனைகள் சம்பந்தமான புள்ளி விவ ரங்கள் பின் வருமாறு.—

1947–48-ல் சங்கங்களின் எண்ணிக்கை—28 ; அலு வலில் அமர்ந்த மாஜி-கள்ளிறக்குவோரின் எண்ணிகை—576 ; வழங்கப்பட்ட லைசென்ஸ்களின் எண்ணிக்கை—576 ; உற்பத்தி செய்த பனைவெல்லம் 2,834 மணங்கு.

1948–49-ல் சங்கங்களின் எண்ணிக்கை—41 ; அலு வலில் அமர்ந்த மாஜிகள்ளிறக்குவோரின் எண்ணிக்கை—1,483 ; வழங்கப்பட்ட லைசென்ஸ்களின் எண்ணிக்கை—

719 (பனைமரங் கள்) ; 12 ஈச்சமரங்கள் ; உற்பத்தி செய்த பனைவெல்லம் மணங்கு 8,334 ; இதன் மதிப்பு ரூ. 23,980, 6 மணங்கு மதிப்பு ரூ. 25 ; விற்பனை செய்த வெல்லத்தின் அளவும் விலையும் 8,170 மணங்கு, விற்ற விலை ரூ. 29,798 ; 5 மணங்கு விலை ரூ. 20.

1949–50-ம் ஆண்டு இத்திய சங்கங்களின் எண்ணிக்கை 65 ; அலுவலில் அமர்ந்த மாஜி-கள்ளிறக்குவோர் எண்ணிக்கை 2,147 ; வழங்கப்பட்ட லைசென்ஸ்களின் எண்ணிக்கை 1,593 (பனை மரங்கள்), 228 (ஈச்சமரங்கள்) ; உற்பத்தி செய்த பனை வெல்லம் மணங்கு 2,968 ; மதிப்பு ரூ. 13,073 ; 719 மணங்கு, மதிப்பு ரூ. 3,008 ; விற்பனை செய்த வெல்லத்தின் அளவும் விலையும் ; 3,048 மணங் கு, விற்ற விலை ரூ. 17,303 ; 718 மணங்கு விற்றவிலை ரூ. 3,903.

இதனால் மேற்படி கூட்டுறவு சங்கங்களின் அங்கத்தினருக்குத் தினந்தோறும் பனை வெல்ல உற்பத்தியில் ரூ. 1–5–0ம் ஈச்ச வெல்ல உற்பத்தியில் ரூ. 1–4–0-ம் ஊதியமாகக் கிடைத்தன.

சிறந்த முறையில் வெல்ல உற்பத்தி செய்யும் தொழிலில் மாஜி-கள்ளிறக்குவோருக்குப் பயிற்சியளிப்பதற்காக, இந்த ஜில்லாவில் 2 பனைவெல்ல உற்பத்தி ஆசிரியர் நியமிக்கப்பட்டனர். அவ்வாசிரியர் மூலம் ஒவ்வொரு கூட்டுறவு அங்கத்தினருள் 6 நபர்கள் பயிற்சி பெற்று வந்தனர். இப்பயிற்சிக்காக ஏற்படும் செலவுக்காக இந்திய சர்க்கார் வழங்கியுள்ள மான்யத் தொகையில் ரூ. 536–13–0ஐ நமது ராஜ்ய சர்க்கார் இந்த ஜில்லாவிற்கு ஒதுக்கி வைத்துள்ளார்கள்.

## கிராம அபிவிருத்தி முறை

இப்பயிற்சியின் பயனாக அபிவிருத்தி முறையில் இதுவரையில் ரூ. 1,046–12–0 பெறுமானமுள்ள $3,446\frac{3}{4}$ மணங்கு வெல்லம் உற்பத்திசெய்யப்பட்டது. அவ்வளவு வெல்லமும் ரூ. 1,224–13–8 விற்கப்பட்டது. சில முக்கிய கண்காட்சி சாலைகளில்—உதாரணமாக திரு

வண்ணமலை கண்காட்சி சாலையில்—மக்கள் பார்ப்பதற்காக இவ்வபிவிருத்தி முறையில் உற்பத்தி செய்த வெல்லம் வைக்கப்பட்டது. ஆரணி மாதர் குடிசைத் தொழில் கூட்டுறவு சங்கத்தினர் மகாநாடு கூட்டிய சமயத்தில் உயர்ந்த ரக வெல்லம் உற்பத்தி செய்யும் முறைகள் மக்களுக்கு செய்து காட்டப்பட்டன. புதுமுறையில் வெல்லம் உற்பத்தி செய்வதற்கான கருவிகள் அடங்கிய ஒரு செட்டின் மதிப்பு ரூ. 75. இந்திய சர்க்கார் வழங்கிய மான்யத் தொகையிலிருந்து 48 செட்டு கருவிகள் உற்பத்தி செய்து அத் தொழிலில் ஈடுபட்டுள்ள மக்களுக்கு இலவசமாக வழங்கப்பட்டன.

### பால் வினியோக முறை

ஆம்பூர், வேலூர், குடியாத்தம் முதலிய தாலூக்காக்களைச் சூழ்ந்துள்ள கிராமங்களில் வசிக்கும் 150 மாஜி-கள்ளிறக்குவோருக்கு வேலையளிக்கும் பொருட்டு ஆம்பூரில் பால் வினியோக சங்கமொன்றும், அதன் கிளை சங்கங்கள் 6 கிராமங்களிலும் அமைக்கப்பட்டன. அச்சங்கங்களின் அங்கத்தினர் கறவைப் பசுக்கள் வாங்கிப் பால் வர்த்தகம் நடத்த, அவர்களுக்கு வட்டியில்லாக்கடன் வழங்கப்பட்டுள்ளது. பால் விற்பனைத் தொகையிலிருந்து இக்கடன் தொகை கொஞ்சங் கொஞ்சமாக ஒரு வருஷக்காலத்துக்குள் வசூலிக்கப்படும். அதன் பிறகு, கறவைப் பசுக்கள் அவர்களுக்குச் சொந்தமாய் விடும்.

145 மாஜி-கள்ளிறக்குவோரைச் சேர்த்து 2,530 அங்கத்தினர்கள் இச்சங்கங்கள் மூலம் பலனடைந்து வருகிறார்கள். மேலும், வந்தவாசி, ஆற்காடு, சோளிங்கிபுரம், வாணியம்பாடி முதலிய இடங்களிலும் இத்தகைய பால் வினியோக சங்கங்களை ஸ்தாபித்து மாஜி-கள்ளிறக்குவோருக்கு அனுகூலம் செய்யப்படுகிறது.

1948–49-ஆம் ஆண்டில் மாஜி-கள்ளிறக்குவோரில் 264 நபர்கள் விவசாயக் கூலிகளாகவும், 3 நபர்கள் கைத்தொழில் வாணிப ஸ்தாபனங்களில் வேலையாட்களாகவும், 2 நபர்கள்

பியூன்கள், காவலாளிகளாகவும், 25 நபர்கள் இதர அலுவல்களிலும் அமர்ந்து ஜீவனம் செய்து வருகி ருர்கள்.

1949–50-ஆம் ஆண்டில் 340 நபர்கள் விவசாயக்கூலி களாகவும், 15 நபர்கள் கைத்தொழில், வாணிப ஸ்தா பனங்களில் வேலையாட்களாகவும், 4 நபர்கள் பியூன்கள், காவலாளிகளாகவும், 108 நபர்கள் இதர அலுவல்களிலும் அமர்ந்து வாழ்க்கை நடத்தி வருகிருர்கள்.

## பந்தய விளையாட்டுகள்

மாஜி-கள்ளருந்துவோருக்கு அநுகூலமாக 1946-ம்ஸு அக்டோபர்மீ 1உயிலிருந்து 1948-ம் ஆண்டு முடிய கிராமப் பந்தய விளையாட்டுகளும், 55 பிர்க்கா பந்தய விளையாட்டுக் களும், 11 தாலூகா பந்தய விளையாட்டுகளும், ஒரு ஜில்லா பந்தய விளையாட்டும் நடைபெற்றன. இவ் விளையாட்டு களில் ஈடுபடும் மாஜி-கள்ளருந்துவோர்கள் குடிக்கும் வழக்கத்தை அறவே மறந்து விடுவார்கள். இந்த விளை யாட்டுக்களின் மூலம், "சடுகுடு", "கயிறிழுத்தல்", "ஓட்டப்பந்தயம்" இன்னும் இதர கிராம விளையாட்டுகள் புனருத்தாரணம் செய்யப்படுகின்றன.

இந்த ஜில்லாவிலுள்ள 30 கிராமங்களில் தெருக்கூத்து நடத்த சர்க்கார் 1948–49-ம் ஆண்டில் ரூ. 750 செலவழித் தார்கள்; 1949–50-ம் ஆண்டில் 20 கிராமங்களில் தெருக் கூத்து நடத்த ரூ. 500 வழங்கப்பட்டது.

கிராம க்ஷேமாபிவிருத்தி சங்கத்துச் சிப்பந்திகள் அநேக பள்ளிச்சிறுவர், சிறுமியர்களுக்கு மதுவிலக்கு நாடகங்கள் நடத்தப் பயிற்சியளித்தனர்.

மாஜி-கள்ளருந்துவோர் குடிக்காகச் செலவழிக்கும் பணத்தைச் சேமித்துவைக்க அவர்களுக்கு உண்டிப்பெட்டி கள் விநியோகிக்கப்பட்டன.

சிக்கன முறையில் உண்டிப்பெட்டிகள் மூலம் வருஷ வாரி சேகரித்த தொகைகளின் விவரங்கள் கீழேதரப்பட் டுள்ளன :—

| வருஷம். | வினியோகித்த உண்டிப்பெட்டிகள். | சேமித்து வைத்த தொகை. |
|---|---|---|
| 1947–48 | 1,921 | ரூ. 16,648 |
| 1948–49 | 1,233 | ,, 9,587 |
| 1949–50 | 492 | ,, 18,440 |

இவ்வாறு ஒரு வருஷ காலம் வரையில் சேமிக்கப்பட்ட தொகைக்கு மாதமொன்றுக்கு ரூபா ஒன்றுக்கு ¾ பை விகிதம் வட்டி வழங்கப்படுகிறது. வருஷ முடிவில் அவரவர் சேமித்துவைத்த தொகை அவரவர்களுக்கு மேற்கூடிய வட்டியுடன் திருப்பிக்கொடுக்கப்படும்.

## மாதர் நல இலாகா

மாதர்நல இலாகாவினர், 1946-ம் ஆண்டுக்கு முன்னதாக அரக்கோணத்தில் கிளை நிலையமொன்று ஸ்தாபித்துச் சேவை செய்து வருகின்றனர். அதன் பிறகு ஜில்லாவின் பிர்க்கா பிரதேசங்களில் இன்னும் 4 புதிய கிளை நிலையங்கள் நிறுவப்பட்டன.

இந் நிலையங்களில் சமூகக் கல்வி, முதியோர் கல்வி, நூல் நூற்றல், துணி நெய்தல், தையல் வேலை, சரிகை வேலை, வீட்டுஉபயோகத்துக்கான மை, சாந்து, பற்பொடி, சோப்பு, ஓமத் தண்ணீர், ஊறுகாய்கள் முதலிய வேலைகள் கற்பிக்கப்படுகின்றன; உணவு வகைகளின் போஷாக்கு, சுகாதாரம், சிசு சம்ரக்ஷணை, தோட்ட வேலை, குடும்ப முறை முதலியனவும் போதிக்கப்படுகின்றன. எங்கெங்குச்



சாத்தியமோ அங்கெல்லாம் காய்கறிகள் பயிரிடும் தோட்டங்கள் அமைக்கப்படுகின்றன.

அக் கிளை நிலையங்களில் மாதக் கூட்டங்கள் நடைபெறுகின்றன. தேசீயப் பண்டிகைகள் நடத்தி வைக்கப்படுகின்றன. உண்டு பழக்கமில்லாத உணவுப் பொருள்கள் தயாரிக்கும் விதமும் கற்பிக்கப்படுகிறது.

## வீட்டுச் சேவை

சமூக அமைப்புக்கு வீடுதான் அடிப்படையாகும். அதனுல், மாதர் நல இலாகாவைச் சேர்ந்த அமைப்பாளர்கள் காலைவேளைகளில் ஒவ்வொரு வீட்டுக்குச் சென்று அங்குள்ள மாதர்களுக்குப் பல விஷயங்களைப்பற்றி யோசனை கூறுகிருர்கள். அவ் வீடுகளில் வசித்துவரும் நோயாளிகளை ஆஸ்பத்திரிகளுக்குக் கொண்டுபோய் சேர்க்கிருர்கள். சொற்ப நோய்களுக்குக் கையாதரவான மருந்து வகைகளை நிலையத்தாரே இலவசமாக அளிக்கிருர்கள். இந் நிலையங்களில் அங்கத்தினராய் இருக்கும் அனேக மாதர் தங்கள் வீட்டிலுள்ள ஆண் பிள்ளைகளுக்கு வேலைகள் தேடித் தந்து உதவியுள்ளார்கள். இந் நிலைய அமைப்பாளர்கள், அனேகரைப் பள்ளிக்கூடங்களில் சேர்த்துள்ளார்கள்; தொழிற் கல்வியில் போதனை பெற அனேகருக்கு உதவியளித்துள்ளார்கள். கிளை நிலையங்களுக்கு அருகிலும் சேரிகளிலும் உள்ள 2½ வயது முதல் 7 வயதுள்ள சிறுவர்களுக்கு பிரி-பேஸிக் வகுப்புகளில் சேர்ந்து படிக்க வசதிகளுள்ளன.

அரக்கோணம்.—இங்கு 6 கிளை நிலையங்களும், 2 பயிற்சி பெற்ற அமைப்பாளரும் இருந்தனர். 1949-ம் ஞு டிசம்பர் மீ இந் நிலையங்களின் எண்ணிக்கை மூன்ருகக் குறைந்துவிட்டது. அவை மூன்றும் ஒரே அமைப்பாளரின் ஆதிக்கத்தின் கீழ் இருந்து வருகின்றன. தற்போது அரக்கோணத்தில் மாதர் நல நிலையங்கள் பின்வரும் இடங்களில் நிறுவப்பட்டுள்ளன:—

1. பாண்டுரங்க வேணுகான சபை.

2. சேரி சங்கம்.

3. கிளை காரியாலயத்திலுள்ள நிலையம்.

சராசரி 60 அங்கத்தினர் இந் நிலையங்களில் ஆஜராகின்றனர். வருஷா வருஷம் 17 அங்கத்தினர் கல்வியறிவு பெறுகின்றனர். வருஷவாரி 165 நோயாளிகளுக்கு ஆஸ்பத்திரி வசதிகள் அளிக்கப்படுகின்றன. இன்னும் 40 நபர்கள் வேறு உதவிகள் பெறுகின்றனர். 70 குழந்தைகள் 'பிரி பேஸிக்' வகுப்புகளில் சேர்ந்து படிக்கிறார்கள். அரக்கோணத்தில் பெருவாரியாய் காலரா, டைபாயிட் என்னும் விஷ ஜுரம் பரவினால், இந் நிலையத்தார் சுகாதார சிப்பந்திகளுடன் சேர்ந்து மக்களுக்கு ஊசிக் குத்துவதில் ஈடுபடுகிறார்கள்.

ஒடுகாத்தூர்,—இங்கு, கிளை காரியாலயத்திலும், ராஜபாளையத்திலும், சேரியிலும் மூன்று நிலையங்கள் உள. பயிற்சி பெற்ற அமைப்பாளர் காலை வேளைகளில் வீடு தோறும் சென்று வருகிறார். சேரி நிலையத்தில் மூத்தோர் கல்வி நடைபெறுகிறது. சராசரி 60 அங்கத்தினர் இந் நிலையங்களுக்கு ஆஜராகிறார்கள். 29 குழந்தைகள் "பிரி-பேசிக்" வகுப்புகளில் வாசிக்கிறார்கள். தக்ளி, சர்க்கா ஆகியவற்றின் மூலம், மக்கள் நூல் நூற்கிறார்கள். இத் தொழிலால் 20 நபர்கள் பயனடைகிறார்கள். இந் நிலையங்களில் மாதக் கூட்டங்கள் ஒழுங்காக நடைபெறுகின்றன; தினை, சோளம் முதலியவற்றிலிருந்து வாய்க்கு ருசிகரமான தின்பண்டங்கள் தயாரிக்கும் வழிவகைகள் கற்பிக்கப்படுகின்றன. பகற்காலங்களில் அனேக மாதர் கழனிகளில் வேலை செய்துவருவதால், அவர்களுக்கு அனுகூலமாக இராக் காலத்தில் இவ் வகுப்புகள் நடைபெறுகின்றன.

மேல் ஆரணி—.இங்கு 1949-ம் ஆண்டு ஒரு பயிற்சி பெற்ற அமைப்பாளரின் தலைமையில் கிளை காரியாலயம் நிறுவப்பட்டது. இக் கிளை காரியாலத்திலும், சாவடியிலும் சேரியிலுமாக மூன்று நிலையங்கள் உள. இந் நிலையங்களில் 48 அங்கத்தினர் ஆஜராகின்றனர். மூத்தோர் கல்வி இந் நிலையங்களில் போதிக்கப்படுகிறது. 40 அங்கத்தினர்கள்

இதனால் பயனடைந்திருக்கிறார்கள். 32 குழந்தைகள் 'பிரி பேஸிக்' வகுப்புகளில் சேர்ந்து படிக்கின்றனர். வருஷவாரி சராசரி 80 அங்கத்தினருக்கு ஆஸ்பத்திரி வசதிகள் அளிக்கப்படுகின்றன. இங்கு காலரா முதலிய கொள்ளை நோய்கள் பரவும்போது மாதர் நல இலாகாவினர் சுகாதார சிப்பந்திகளோடு கலந்து மக்களுக்கு ஊசி குத்துகிறார்கள்.

கலசப்பாக்கம்.—1949-ம் ௵ மார்ச்சு௴ இங்கு நிறுவப்பட்ட கிளை காரியாலத்திலுள்ள அமைப்பாளர் 3 சேவை இல்லங்களை நடத்தி வருகிறார். கிளை ஆபீசிலும், ஈஸ்வரன் கோயில் நிலையத்திலும், தென் பள்ளிப்பட்டு நிலையத்திலும் இவ் வில்லங்கள் பணியாற்றி வருகின்றன. இக் கிளை காரியாலயம், இதே பிர்க்காவிலுள்ள கடலாடி என்னும் கிராமத்துக்கு மாற்றப்படுகிறது.

வேலூர்.—1950-ம் ௵ டிசம்பர்௴ இங்கு ஒரு கிளை காரியாலயம் ஸ்தாபிக்கப்பட்டது. மேற்கூறிய கிளை காரியாலயங்களுக்கு மாதர் நல உதவி ஆபீசர் விஜயஞ்செய்து அங்குள்ள அமைப்பாளரின் சேவைகளைக் கவனித்து அவ் வமைச்சாளருக்கு உதவிபுரிகிறார். இந்தக் கிளை காரியாலயங்கள் ஒவ்வொன்றையும் சேர்ந்த பிரதேச ஆலோசனைக் கமிட்டிகள் அந்தந்தக் கிளை காரியாலயங்களை அபிவிருத்தி செய்ய முயன்று வருகின்றன. சமூகப் பணியில் ஈடுபட்டு உழைத்துவரும் பொறுப்பு வாய்ந்த மாதர் ஒருவரைத் தலைவியாகக்கொண்ட இக் கமிட்டியில் சமூக சேவை உள்ளம்படைத்த மாதர்கள் அங்கத்தினராய் இருக்கிறார்கள்.

## ஆஸ்தான கவிஞர் நியமனம்

சென்னை ராஜ்ய சர்க்கார் பதவி ஏற்றதும், நமது ராஜ்யத்தில் முற்கால மன்னர்களைப்போல் பலவித கலைகளை அபிவிருத்தி செய்யவேண்டும் என்னும் நோக்கங் கொண்டு, முதன் முதலாக, பிரதேச மொழிகளில் ஆஸ்தான கவிஞரை நியமித்தார்கள். அம் மொழிகளில்

எழுதப்படும் சிறந்த நூல்களுக்குப் பரிசில் வழங்கவும் ஏற்பாடு செய்துள்ளார்கள்.

ஸ்ரீ நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை அவர்கள் தமிழ் நாட்டு ஆஸ்தான கவிஞராக நியமிக்கப்பட்டுள்ளார். இவர் காந்தீயக் கொள்கைகளை அடிப்படையாகக்கொண்டு அநேக பாடல்கள் எழுதியுள்ளார்.

ஆஸ்தான கவிஞர் நியமனம் ஐந்து வருஷத்துக்கு ஒரு முறை நடைபெறும். இவ்விதம் நமது ஜனநாயக சர்க்கார் பொது மக்கள் விருப்பத்துக் கிணங்கி நியமிக்கும் ஆஸதான கவிஞர் ஒவ்வொருவருக்கும் வருஷந்தோறும் ரூ. 1,000 சம்மானமாக வழங்கப்படும்.

தற்போது நியமிக்கப் பெற்றுள்ள ஆஸ்தான கவிஞர் அனைவரும் நமது சர்க்காரிடமிருந்து விருதுகள் பெற்றனர்.

நமது சர்க்கார் பிரதேச மொழிகளின் அபிவிருத்தியைக் கருதி அவ்வம் மொழிகளில் எழுதப்படும் சிறந்த வசன நூல்களுக்கும், காவியங்களுக்கும் வருஷந்தோறும் பரிசில் வழங்கிவருகிறார்கள்.

## நீதி - நிர்வாகப் பிரிவினை

இப்பிரிவினைக்காக இந்திய மக்கள் நெடுங்காலம் கிளர்ச்சி செய்து வந்தார்கள். சிவில் வழக்குகள் சம்பந்தமான நீதி நம் நாட்டில் அநேக நூற்றுண்டுகளாகத் தனித்து நடைபெற்று வருகிறது. ஆனல், கிரிமினல் வழக்குகளில் இது காறும், சட்டப்படிப்பில் பயிற்சியற்ற அரசியல் நிர்வாகஸ்தரே தீர்ப்பு அளித்து வந்தார்கள். அவர்களுடைய தீர்ப்பில் மக்களுக்கு நம்பிக்கை இல்லாததால், கிரிமினல் வழக்குகள் சிவில் வழக்குகளைப் போலவே சட்டந் தெரிந்த அதிகாரிகளால் தீர்க்கப்பட வேண்டுமென்று பெரிதும் கோரி மேற்கூறியவாறு கிளர்ச்சி செய்தார்கள்.

நமது ஜனநாயக சர்க்கார், பதவியேற்றவுடன், அரசியல் சட்டம் நிறைவேற்றப்படுவதற்கு முன்னமே, சென்னை

ராஜ்யத்தில் இச் சீரிய சீர்திருத்தத்தைப் புகுத்தினர்கள். நம் ராஜ்யத்தில் இச் சீர்திருத்தம் வெகு சுலபமான முறையில் நிறைவேற்றப்பட்டது.

இந்த ராஜ்யத்தைச் சேர்ந்த ஜில்லாக்களில் கிரிமினல் வழக்குகளைத் தீர்த்துவைக்க சட்டத்தில் பயிற்சி பெற்றவர்கள் மாஜிஸ்ட்ரேட்டுகளாக நியமிக்கப்பட்டுள்ளார்கள். இப் புதிய மாஜிஸ்ட்ரேட்டுகள் யாவரும் சென்னை ஹைகோர்ட்டு ஆதீனத்துக்குட்பட்டவர்கள். அரசியல் நிர்வாகத்துக்கும் இவர்களுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. இவர்கள் சிவில் நீதிபதிகளைப் போலவே கிரிமினல் வழக்குகளைத் தனித்தும் சுயேச்சையாகவும் தீர்த்துவைப்பார்கள்.

1949-ம் ௵ அக்டோபர் ௴ 2௳ இப் புதிய சீர்திருத்தம் வட ஆற்காடு, செங்கற்பட்டு ஜில்லாக்களில் புகுத்தப்பட்டன. அந்த ஜில்லாக்களில் கிரிமினல் வழக்குகளைத் தீர்த்துவைக்க அனேக மாஜிஸ்ட்ரேட்டுகள் நியமிக்கப்பட்டனர்.

## சமூக ரேடியோ செட்டுகள்

இந்த ஜில்லாவில் 1938-ம் ஆண்டிலேயே சமூக ரேடியோ செட்டுகளை நிறுவ ஆரம்பித்தனர். ஆயினும், நமது ஜனநாயக சர்க்கார் 1946-ம் வருஷம் பதவியேற்ற பிறகே சமூக ரேடியோ செட்டுகளை நிறுவுவதில் ஆர்வம் காட்டப்பட்டது.

1946-ம் வருஷம் ஏப்ரல் ௴ ஆரம்பத்தில் பஞ்சாயத்து போர்டுகளில் 16 செட்டுகளும், முனிசிபாலிடிகளில் 6 செட்டுகளும் அமைக்கப்பட்டிருந்தன. இப்போது 21 பஞ்சாயத்து போர்டுகளிலும், 5 தனிப்பட்ட ஸ்தாபனங்களிலும், 4 சர்க்கார் ஸ்தாபனங்களினும், 7 முனிசிபாலிட்டிகளிலுமாக மொத்தம் 37 ரேடியோ செட்டுகள் இந்த ஜில்லாவில் அமைக்கப்பட்டுள்ளன.

திருவண்ணாமலையில், ரேடியோ சேவையை வெற்றிகரமாக நடத்துவதற்கு ஒரு ரேடியோ சேவை நிலையம் அமைக்கப்பட்டுள்ளது.

இவை சம்பந்தமாய் நமது சர்க்கார் வருஷந்தோறும் ரூ. 9,250 செலவிடுகிறார்கள். இந்திய சர்க்கார் இதற்காக ரூ. 4,220 வழங்கி வருகிறார்கள்.

சமூக ரேடியோ செட்டுகள் நிறுவப்பட்டுள்ள இடங்கள் பின்வருமாறு:

ராணிப்பேட்டை, ஆரணி, காவேரிப்பாக்கம், அரக்கோணம், வேலூர் விசேஷ அபிவிருத்தி அதிகாரி, ஆற்காடு, சோளங்கிபுரம், போளூர், புதுப்பாளையம், களம்பூர், அம்மூர், திருவெட்டிபுரம், வந்தவாசி, சுமைதாங்கி, துறைப்பாடி, காட்டுப்பாடி, செங்கம், திமிரி, தரபாடவேடு, தக்கோலம், கலவை, வெட்டவாளம், சேத்துப்பட்டு, மருதாடு, நாராயணகுப்பம், அரக்கோணம், ஜோலார்ப்பேட்டை, கலசப்பாக்கம், பாடகம், பில்லூர், மேல் வில்வராயநல்லூர், பதியவாடி, திருமணி, சக்கரமல்லூர், காப்பலூர், லாடவரம், எலாத்தூர், பனம்பட்டு, பேரம்பட்டு, தெல்லூர்.

### தனிப்பட்ட ஸ்தாபனங்கள்

(1) பள்ளிகொண்டா கூட்டுறவு சங்கம், (2) சத்திய விஜயநகரம், (3) புள்ளியமங்கல கிராம சங்கம், (4) பனப்பாக்கம் கிராம சங்கம்.

### சர்க்கார் ஸ்தாபனங்கள்

ஜூனியர் செர்டிபைட் பாடசாலை, மிருக வைத்திய ஆராய்ச்சி நிலையம், ராணிப்பேட்டை.

### முனிசிபாலிட்டி

(1) குடியாத்தம் மூன்று செட்டுகள், (2) திருப்பத்தூர் இரண்டு செட்டுகள், (3) திருவண்ணாமலை ஐந்து செட்டுகள், (4) வாணியம்பாடி, வாலாஜாப்பேட்டை இரண்டு செட்டுகள்.

# ஐந்தாண்டுத் திட்டம்

---

** ஆண் பெண் உள்ளிட்ட எல்லாப் பிரஜைகளும் ஜீவனோபாயத்துக்காகப் போதிய வழிவகைகளைச் சமமாகப் பெறவேண்டும்.*
** பொது நலத்தை முன்னிட்டு, சமூக சொத்து சுதந்திரங்களின் சொந்தமும் கட்டுப்பாடும் வகுக்கப்படவேண்டும்.*
** செல்வமும் பொருள் உற்பத்தி சாதனங்களும் பொதுஜனங்களுக்குப் பாதகமாகாத ரீதியில் ஒரு சிலரிடம் சேர்ந்துவிடாதபடி, பொருளாதார அமைப்பு இயங்கி வரும்படி பார்த்துக் கொள்ளவேண்டும்.*

இந்திய திட்டக் கமிஷனின் கொள்கைகள்.

காலம் என்பது எல்லாவற்றையும் கடந்து நிற்பது. காலச்சக்கரத்தை யார்தான் தடைசெய்ய முடியும்? ஆயினும் அதன் நியதியை உணர்ந்து, அதற்கேற்ப தங்கள் வாழ்வை ஆராய்ந்து அமைத்துக்கொள்வோரும் இல்லாமலில்லை. அத்தகையவர்கள் காலத்தோடு சேர்ந்து முன்னேறும் ஆற்றலைப் பெறுகின்றனர்.

சென்ற காலத்தை நினைவில் வைத்துக்கொண்டு, நிகழ் காலத்தில் கடமைகளைச் செய்தவண்ணமே, எதிர்

காலத்தைப்பற்றியும் சிந்திக்கும் திறமை, மனிதர்களுக்குள்ள ஒரு சிறப்பான ஆற்றலாகும். மிருகங்கள் அன்றாட வாழ்க்கையைப்பற்றி மட்டும் கவலைப்படுகின்றன. நேற்றைய நினைவும், நாளைய எண்ணமும் இல்லாத நிலை, நாகரிகம் வளராததன் அறிகுறி.

பொதுவான இந்த உண்மைகள் தனி மனிதனுக்கு மட்டும் பொருந்துவன அல்ல. மொத்த சமுதாயத்துக்கும், சிறப்பாக நம் நாட்டிற்கும், அப்படியே பொருந்தும்.

மக்கள் பிரதிநிதிகள் 1946-ம் ஆண்டு அரசாங்கத்தை ஏற்றபோது, எல்லா அதிகாரங்களையும் அவர்கள் பெற்றிருக்கவில்லை. ஆங்கில அதிகாரவர்க்க அமைப்பும், ஆட்சிமுறையும் அப்போது இருந்துவந்தன. அவற்றுக்குட்பட்டே மக்கள் அரசாங்கம் செயலாற்ற வேண்டியிருந்தது. அதன் பிறகு 1947-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15-ந் தேதியன்று இந்தியா சுதந்திரம் அடைந்ததும், அநேக புதிய பிரச்னைகளும், பொறுப்புகளும் ஏற்பட்டன. அவற்றை உடனடியாகத் தீர்ப்பதில் தங்கள் முழு கவனத்தையும் அரசாங்கம் செலுத்த வேண்டியதாயிற்று. இவை தவிர, இரண்டாவது மகா யுத்தத்தின் விளைவாக உலகமெங்கும் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டிருந்தது.

மக்கள் அரசாங்கம் கடந்த ஐந்தாண்டுகளாக இத்தனை இடையூறுகளுக்கிடையேயும், பல்வேறு துறைகளிலே சிறந்த காரியங்களைச் சாதித்திருப்பதை, இதுவரை கூறிவந்த விவரங்களால் அறியலாம். நிகழ்காலப் பிரச்னைகளைத் தீர்ப்பதோடு இந்த அரசாங்கம் நின்றுவிடவில்லை. எதிர்கால க்ஷேமத்துக்காக அவசியமான திட்டமொன்றை அவர்கள் திறம்பட வகுத்துள்ளனர். அதற்கு ஐந்தாண்டுத் திட்டம் என்று பெயர். இந்திய நாட்டின் எல்லாத்தேவைகளையும் சரிவர ஆராய்ந்து, அவற்றைப் படிப்படியாகத் தீர்க்க வழிகோலப்பட்டது. இங்குள்ள இயற்கைச் செல்வங்களையெல்லாம் நன்கு பயன்படுத்துவதற்கான வழி விவரிக்கப்பட்டன. சாகுபடியாகாமல் கிடக்கும் தரிசு நிலம், நிலத்துக்கடியிலுள்ள உலோகவகைகள், நதிகளில்

ஓடும் ஏராளமான நீர், சோம்பிக்கிடக்கும் அளவற்ற மனித சக்தி முதலியவற்றைத் தக்கவாறு உபயோகித்து, நாட்டின் செல்வ நிலையைப் பெருக்கி, மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்த முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அகில இந்திய ரீதியில் தயாரான இத் திட்டம், நம் சென்னை ராஜ்யத்திற்கு மிகச் சிறந்த எதிர்காலத்தை உருவாக்க முனைகிறது. இதை நிறைவேற்ற ஐந்தாண்டுகளுக்கு 137 கோடி ரூபாய் செலவாகுமென மதிப்பிடப் பெற்றிருக்கிறது.

மக்கள் சர்க்கார் ஏற்படாததற்கு முன்பு, கல்வி, சுகாதாரம், விவசாயம், கூட்டுறவு முதலிய தேசீய அபிவிருத்தித் திட்டங்களுக்கு 10,61,84,000 ரூபாய் செலவிடப்பட்டு வந்தது. ஜனப்பிரதிநிதிகள் ஆட்சிவந்ததும், இந்தச் செலவு 42,22,50,000 ரூபாய் ஆயிற்று. எனவே, தேசீய அபிவிருத்தித் திட்டங்கள் முன்னை விட இப்போது நான்கு மடங்கு அதிகரித்துள்ளன. இவற்றுள் முக்கியமாக, நீர்ப்பாசனத்துறையிலே பிரமிக்கத்தக்க அபிவிருத்தி காணப்படுகிறது. 150 வருஷ ஆங்கில ஆட்சியில் சுமார் 18 கோடி ரூபாய் மாத்திரமே, இந்த ராஜ்யத்தின் நீர்ப்பாசனத் திட்டங்களுக்காகச் செலவிட்டார்கள். ஆனால், கடந்த ஐந்தாண்டுகளில் ஏறக்குறைய 20 கோடி ரூபாய் இதற்காக மக்கள் சர்க்கார் செலவிட்டுள்ளனர். இந்த ஆண்டில்மட்டும் சுமார் 10 கோடி ரூபாய் செலவிட உத்தேசித்திருக்கிறார்கள். இதன் விளைவாக, நாடெங்கும் அநேக நீர்ப்பாசனத்திட்ட வேலைகள் துரிதமாக நிறைவேறி வருகின்றன. சிறப்பாக, வறண்ட இடங்களிலும், ஜமீன், இனம் பிரதேசங்களிலும் இவை விசேஷமாக அங்கீகரிக்கப் பட்டுள்ளன.

தவிர மற்ற ராஜ்யங்களோடு ஒத்திட்டுப்பார்த்தால் சென்னை ராஜ்யம் பலவகையிலும் முன்னேறியிருப்பது நன்கு விளங்கும்.

அஸ்ஸாம், கிழக்கு பஞ்சாப் ஆகியவை உள்பட எல்லா ராஜ்யங்களும் சேர்ந்து, நீர்ப்பாசனம், மின்சாரம் ஆகிய

வற்றுக்கு 32 கோடி ரூபாய் செலவிடுகின்றன. அவற்றுள் 13 கோடி ரூபாய் அதாவது மூன்றில் ஒரு பங்குக்குமேல், நம் ராஜ்யம் செலவழிக்கின்றது. பீஹார், மத்தியப் பிரதேசம், ஓரிஸ்ஸா, உத்தரப் பிரதேசம், மேற்கு வங்காளம் ஆகிய ராஜ்யங்கள் சேர்ந்து 11 கோடி ரூபாய் செலவழிக்கின்றன. இவை எல்லாவற்றையும் விட இரண்டு கோடிக்கு மேலாக, நம் ராஜ்யம் ஒன்றே செலவிடுகிறது. உத்தரப் பிரதேசத்தை விட 3 மடங்கும், பீஹாரைவிட 6 மடங்கும், நம் ராஜ்யம் செலவிடுகின்றது. பம்பாய் ராஜ்யம் இந்த வகையில் செலவழிக்கும் ரூபாய் 8 கோடியேயாகும்.

நம் ராஜ்யத்தில் தேசிய அபிவிருத்திக்காகும் செலவில் சுமார் 50 சத விகிதம் நீர்ப்பாசனம், மின்சாரம் ஆகியவற்றுக்கே செலவிடப்படுகிறது. இதற்காக வங்காளத்தில் 7 சத விகிதமும், பீஹாரில் 12 சத விகிதமும் பம்பாயில் 29 சத விகிதமும், மத்தியப் பிரதேசத்தில் 30 சத விகிதமும், ஓரிஸ்ஸாவில் 22 சத விகிதமும், உத்தரப் பிரதேசத்தில் 41 சத விகிதமும் செலவிடப்படுகின்றன.

அடுத்த ஐந்தாண்டுகளில் கீழ்க்காணும் முறையில் தேசிய அபிவிருத்தித் திட்டங்களுக்காக அரசாங்கம் செலவிடும் தொகைகள் :—

| | | கோடி ரூபாய். |
|---|---|---|
| 1. | நீர்ப்பாசன, மின்சாரத் திட்டங்கள். | 80·4 |
| 2. | விவசாயம், கிராமாபிவிருத்தி ... | 21·9 |
| 3. | கைத்தொழில்கள் ... ... | 2·1 |
| 4. | ரஸ்தா அபிவிருத்தி ... ... | 5·0 |
| 5. | கல்வி, சுகாதாரம், இருப்பிட வசதிகள், பிற்பட்ட வகுப்பினர் முன்னேற்றம் முதலான மற்ற சமூக நிர்மாண வேலைகள் ... ... | 27·6 |
| | ஆக மொத்தம் ... | 137·0 |

நீர்ப்பாசன, மின்சாரத் திட்டங்களுக்காக எல்லா ராஜ்யங்களுமாகச் சேர்ந்து மொத்தம் 191 கோடி ரூபாய் செலவிட உத்தேசித்துள்ளன. இதில் சென்னை ராஜ்யம் ஒன்றே 80 கோடி ரூபாய் செலவிடும். மற்ற ராஜ்யங்களெல்லாம் சேர்ந்து 111 கோடி செலவிடும். இதில், மற்றொரு முக்கிய விஷயம் கவனிக்கத்தக்கது. அதாவது, அந்தந்த ராஜ்யங்கள் நிறைவேற்றும் திட்டங்கள் அல்லாமல், பொதுவாக சில பெரிய திட்டங்கள் மத்திய சர்க்காரே நிறைவேற்ற முடிவு செய்துள்ளனர். அவற்றிற்காக 176 கோடி ரூபாய் செலவிட உத்தேசிக்கப்பட்டுள்ளது. அத்தகைய திட்டங்களால் பஞ்சாப், பீஹார், மேற்கு வங்காளம், ஒரிஸ்ஸா ஆகிய ராஜ்யங்களுக்கே அதிகமான பலன் ஏற்படும். நம் ராஜ்யத்துக்கு அது போன்ற உதவி அதிகம் இல்லை.

செலவிடுவதில் மட்டும், நம் ராஜ்யம் முன்னணியில் நிற்கவில்லை. சிறந்த பலனைக் காண்பதிலும் அது முன் நிற்கிறது. அடுத்த ஐந்தாண்டுகளில் உத்தரப் பிரதேசம் 800,000 டன், பீகார் 874,000 டன், மேற்கு வங்காளம் 787,000 டன், பஞ்சாப் 650,000 டன், பம்பாய் 367,000 டன் தானியம் அதிகமாக உற்பத்தி செய்யும் என்று உத்தேசிக்கப்பட்டுள்ளது. சென்னை ராஜ்யம் 834,000 டன் உணவுப் பொருள் அதிகம் விளைவிக்கும். எனவே, பீஹாருக்கு அடுத்தபடியாக, அதிக உற்பத்தி செய்யும் ராஜ்யம் சென்னையேயாகும்.

இந்த ஐந்தாண்டுத் திட்டத்தின், ஒரு சிறப்பான அம்சம், அனுபவ சாத்தியமானதாக இருப்பதேயாகும். நாட்டின் எதிர்கால வாழ்வில் நோக்கங்கொண்ட அதே நேரத்தில், மக்களின் நிகழ்கால நிலையையும் சர்க்கார் மறக்கவில்லை. ஜனங்களுக்கு அதிக கஷ்டமின்றியே, இந்தத்திட்டத்திற்குத் தேவையான நிதியைச் சேகரிக்க உத்தேசித்துள்ளனர். பொது ஜன சுபிட்சத்துக்கான காரியங்களை உடனடியாகச் செய்தால், மக்கள் தாமாகவே மனமுவந்து அரசாங்கத்துக்கு அதிக வருமானம் அளிக்கத் தயங்கமாட்டார்கள் அல்லவா?

சர்க்கார் வருமான விவரம் வருமாறு :—

| | | கோடி ரூபாய். |
|---|---|---|
| 1. | நிலவரி மூலம் சுமார் ... ... | 30 |
| 2. | அரசாங்கச் செலவில் சிக்கனம் செய்வது மூலம் ... ... | 5 |
| 3. | டெபாசிட் செலவினுல் மிகுதியாகும் தொகை ... ... | 8 |
| 4. | அரசாங்கக் கடன் வசூல் மூலம் ... | 17 |
| 5. | ரிசர்வ் நிதியிலிருந்து திருப்பிப் பெறும் வகையில் ... ... | 27 |
| 6. | அதிகப்படி வரிவிதிப்பின் மூலம் ... | 20 |
| 7. | மத்திய சர்க்காரிடமிருந்து மான்யம் ... ... ... | 30 |
| | ஆக மொத்தம் ... | 137 |

முன்பெல்லாம் நாட்டில் அமைதியை நிலைநிறுத்தும் பொறுப்பைமட்டுமே அரசாங்கம் வகித்து வந்தது. சுருங்கச் சொன்னுல் போலீஸ் ராஜ்யமாக இருந்தது. ஆனுல் இன்றோ மக்கள் சர்க்கார் பராமரிப்பு ஆட்சியை நடத்துகின்றனர். அதாவது, பொது ஜன சர்க்காரின் வருமானமும் செலவும், மக்களின் சமூக, கலாசார, பொருளாதார க்ஷேமத்தை லட்சியமாகக் கொண்டே நிர்ணயிக்கப்படுகின்றன. சர்க்கார் வசூலிக்கும் பணம் முழுவதும், மக்களின் பல்வேறு சௌகரியங்களுக்கே திரும்பிவருகிறது. அதற்காக பல சமூக நல வேலைகளைத் துரிதமாக நிறைவேற்றவே சர்க்கார் முயன்று வருகின்றனர். கடந்த ஐந்தாண்டுகளில் சிறந்த அபிவிருத்தியை ஏற்படுத்திய மக்கள் சர்க்கார் அடுத்த ஐந்தாண்டுகளில் மேற்சொன்ன திட்டத்தை வெற்றியோடு நிறைவேற்றி, நாட்டின் செல்வ வளத்தைப் பெருக்கி, பொது ஜனங்கள் சுபிட்சமாக வாழ வகை செய்யும் என்பதில் ஐயமில்லை.

# முக்கியக் குறிப்புகள்

## நாற்புற எல்லைகள்

வடக்கில்—சித்தூர் ஜில்லா.

தெற்கில்—தென் ஆற்காடு ஜில்லா.

கிழக்கில்—செங்கற்பட்டு ஜில்லா.

மேற்கில்—சேலம், சித்தூர் ஜில்லாக்கள்.

## தாலூகாக்கள்

செய்யாறு, அரக்கோணம், செங்கம், போளூர், வேலூர், திருப்பத்தூர், வந்தவாசி, குடியாத்தம், திருவண்ணுமலை, வாலாஜா, ஆரணி.

இந்த ஜில்லாவின் விஸ்தீர்ணம் 4,671 சதுரமைல்.

இங்குள்ள கிராமங்களின் எண்ணிக்கை 2,015.

## வைத்திய ஸ்தாபனங்கள்

சர்க்கார் பெண்ட்லண்ட் ஆஸ்பத்திரி—வேலூர்.

சர்க்கார் ஆஸ்பத்திரிகள்—அரக்கோணம், குடியாத்தம், திருப்பத்தூர் திருவண்ணுமலை, வந்தவாசி.

போலீஸ் ஆஸ்பத்திரி, வேலூர்.

சர்க்கார் டிஸ்பென்சரி, வாலாஜாபேட்டை.

லோகல் பண்டு டிஸ்பென்சரி, ஆரணி, அலங்காயம், ஆற்காடு, செங்கம், சேத்துப்பட்டு, செய்யூர், தேசூர், மராட்டிப்பாளையம், பெரணம்பட்டு, போளூர், கொடியூர், காவேரிப்பேட்டை.

முனிசிபல் ஆஸ்பத்திரி, ஆம்பூர், வாணியம்பாடி.

முனிசிபல் டிஸ்பென்சரி, வேலூர்.

ரெயில்வே டிஸ்பென்சரி, ஜோலார்ப்பேட்டை, அரக்கோணம் (ஹஜ்ஜுல்லா பேட்டை), அரக்கோணம்.

லோகல் பண்டு மாதர், குழந்தைகள் டிஸ்பென்சரி, மேல்விஷாரம்

முனிசிபல் மாதர், குழந்தைகள் டிஸ்பென்சரி, வாணியம்பாடி.

## கல்வி ஸ்தாபனங்கள்

ஊர்ஹீஸ் கல்லூரி, வேலூர்.

இஸ்லாமியா கல்லூரி, வாணியம்பாடி.

மிஷன்ரி மாதர் வைத்தியக் கல்லூரி, வேலூர்.

யூனியன் மிஷன் பயிற்சி பாடசாலை, விருநம்பட்டி.

கன்கார்டியா பயிற்சிப் பாடசாலை, ஆம்பூர்.

மாதர்க்கான சர்க்கார் செகெண்டரி அண்டு பயிற்சிப் பாடசாலை, குடியாத்தம், வேலூர்.

மாதர்க்குரிய மேரி இம்மாக்குலேட் பயிற்சிப் பாடசாலை, திருப்பத்தூர்.

சர்க்கார் அடிப்படைக் கல்விப் பயிற்சிப் பாடசாலை ஆற்காடு.

## தொழில் ஸ்தாபனங்கள்

தி லோகோ ரன்னிங் ஷெட், எம். எஸ். எம். ரெயில்வே—ஜோலார்ப்பேட்டை.

என்ஜினியரிங் ஒர்க் ஷாப்ஸ், எம். எஸ். எம். ரெயில்வே, எஸ். ஐ. ரெயில்வே ஒர்க்ஷாப்—அரக்கோணம்.

பூட் ஒர்க்ஷாப், சென்ட்ரல் ஜெயில், ராயல் என்ஜினியரிங் ஒர்க்ஸ், எம். எம். அலி மோட்டார் செர்விஸ் ஒர்க்ஷாப், ஸ்ரீலக்ஷ்மி, சரஸ்வதி மோட்டார் ட்ரான்ஸ் போர்ட் ஒர்க்ஷாப், வேலூர்.

திருமகள் மில்ஸ் லிமிடெட், சவுத் இன்டியன் ஸில்க்ஸ், லிமிடெட் லட்சுமி, சரஸ்வதி பஸ் செர்விஸ் ஒர்க்ஷாப், சதர்ன் இன்டியா மாச் ஒர்க்ஸ், மாடர்ன் மாச் இன்டஸ்ட்ரீஸ், எம், சிலாபுத்தீன் அண்டு கோ, டானெரி, பி. எ. அப்துல் ஜபார் அண்டு கோ டானெரி, கே. எ. அப்துல் ஜலீல் சாயபு அண்டு கோ, டானெரி, குடியாத்தம்.

கிஷின் சண்ட், செல்லாராம் கார்பெட் வீவிங் பாக்டரி, கே. அப்துல் வாஹித் சாயபு கார்ப்பெட் வீவிங் பாக்டரி, வாலாஜா பேட்டை.

ஐ. எஸ். ஆண்டனிஸ் உல்லன் யார்ன் அண்டு கார்பெட் ஒர்க்ஸ்—வாணியம்பாடி (யுதி யேந்திரம்.)

கொத்தவால் ஹாஜி அப்துல் கரீம் சாயபு அண்டு சன்ஸ் "எ" டானெரி, 'நெய்வாசல்' பி. மகம்மத் ஹுசேன் சாயபு டானெரி நெ. 11. கே. ஹாஜி அப்துல் காதர் அண்டு லால் பாக்ஷா மியான் சாயபு டானெரி. வி. எஸ். கே. ஆதிசெட்டி அண்டு சூரவேலு செட்டி அண்டு கம்பெனி டானெரி. சி. ஐ. ஹாஜி அப்துல்சுபான் அண்டு கோ, டானெரி, சீ. எஸ். எ. அப்துல் மஜீத் சாயபு அண்டு கோ டானெரி. பி. ஆர். மகம்மது பஸ்லுல்லா அண்டு கோ டானெரி குண்டு அப்துல் சுபான் டானெரி. எ. ஆர். கே. மகம்மது கௌஸ். டானெரி—வாணியம்பாடி (கச்சேரி ரோட்டு).

மியான் ஹாஜி இஸ்மெய்ல் சாயபு அண்டு கம்பெனி, டானெரி வாணியம்பாடி (கோவிந்தபுரம்.)

என். மகம்மது ஜமீல் அண்டு கோ டானெரி வாணியம்பாடி, (வளையம்பட்டி.)

ஸ்ரீ கிருஷ்ண ஸில்க் டுவிஸ்டிங் அண்டு வீவிங் பாக்டரி. ஸ்ரீ வெங்கடேஸ்வர ஸில்க் பாக்டரி. ஸ்ரீ லட்சுமி ஸில்க் டுவிஸ்டிங் பாக்டரி, ஸ்ரீ கார்த்திகேயன் மோட்டார் செர்விஸ் ஒர்க் ஷாப், ஆரணி.

எம். பி. டி. ஒர்க் ஷாப்ஸ்—ஆற்காடு.

காட்டுப்பாடி மன்யூர் ஒர்க்ஸ், எச். எம். எஸ். அப்துல் ரஹிமான் அண்டு சன்ஸ் டானெரி, நெ. 1. எச். எம். எஸ். அப்துல் ரஹிமான் அண்டு சன்ஸ் டானெரி நெ. 11. ரோஷன் டானெரி சன்ஸ். பி. கே. எ அண்டு கோ என்ஜினியரிங் ஒர்க்ஸ்—காட்டுப்பாடி.

இ. ஐ. பி. அண்டு எஸ். எப் அண்டு தி பிரசிடென்ஸி மன்யூர் ஒர்க்ஸ், லிமிடெட் (மெஸர்ஸ் பாரி அண்டு கோ, லிமிடெட்.) பி. ஆர். எம். அப்துல் ரஹிமான் சாயபு டானெரி. மகம்மது அஸ்மத்துல்லா பாக்ஷா அண்டு கோ டானெரி. என். எ. தங்கவேலு பிள்ளை

அண்டு கோ டானெரி. கே. ஓ. மகம்மது ராபிக் அண்டு கோ டானெரி. என். ஆனந்தவேலு முதலியார் பிரதர்ஸ் டானெரி—ராணிப்பேட்டை.

காக்கா ரஷீத் ஆமத் பிரதர்ஸ் டானெரி. எஸ். குப்புசாமி முதலியார் டானெரி. ஏ. மகம்மது காஸிம் டானெரி. பி. ஏ. அப்துல் காதர் கம்பெனி டானெரி (பெஷியானி டானெரி.) வி. எல். மகம்மது உஸ்மான் சாயபு அண்டு சன்ஸ் டானெரி—ஆம்பூர்.

பி. எச். அப்துல் வஹாப் டானெரி. எம். ஹாஜி மகம்மது இஸ்மெய்ல் சாயபு டானெரி "சி" ஷாப். எம். ஹாஜி மகம்மது இஸ்மெய்ல் சாயபு டானெரி "பி" ஷாப். எம். ஹாஜி மகம்மது இஸ்மெய்ல் சாயபு டானெரி "ஏ" ஷாப்—பேரணம்பட்டு.

ஏ. அப்துல் சமத் அண்டு கோ டானெரி—வளத்தூர்.

ஏ. எம். அப்துல் ஜமீல் அண்டு டானெரி—பெருமுகை.

கே. டி. ஏ. பாக்ஷா அண்டு டி. ஏ. மஜீத் அண்டு கோ டானெரி—மேல் விஷாரம் (பட்டுத்தாக்கு.)

## நீர்ப்பாசனத் திட்டங்கள்.

செங்கம் தாலுகாவில் கஞ்சி குண்டத்தைப் புதுப்பித்தல்—இதற்கு மதிப்பிட்டுள்ள செலவு தொகை ரூ. 47,500.

காட்டகரம்பாளையம் அணைக்கட்டைப் புதுப்பித்தல்—இதற்கு மதிப்பிடப்பட்டுள்ள செலவு தொகை ரூ. 30,000.

போளூர் ஏரிக்கு ஜலம் சப்ளை செய்யும் மஞ்சள் ஆற்றில் சில இடங்களைப் பழுது பார்த்தல்—இதற்கு மதிப்பிட்டுள்ள செலவு தொகை ரூ. 13,700.

வாலாஜா தாலுகாவிலுள்ள செங்கால் நத்தம் ஏரி கரையை 2 அடி உயர்த்தி அமைத்தல்—இதற்கு மதிப்பிட்டுள்ள செலவு தொகை ரூ. 5,030.

குடியாத்தம் தாலுகாவில் காவனூர் ஏரிக்கு ஒரு புதிய சப்ளை கால்வாய் அமைத்தல்—இதற்கு மதிப்பிட்டுள்ள செலவு தொகை ரூ. 7,500.

போளூர் தாலுகாவில் வம்பலூர் ஏரிக்கு ஒரு புதிய சப்ளை கால்வாய் அமைத்தல்—இதற்கு மதிப்பிட்டுள்ள செலவு தொகை ரூ. 9000.

ராணிப்பேட்டைக்கு அருகில் உள்ள வனபாடி சித்தேரியைப் புதுப்பித்தல்—இதற்கு மதிப்பிடப்பட்டுள்ள செலவு தொகை ரூ. 2,340.

வந்தவாசி தாலுகாவிலுள்ள மருதாடு ஏரிக்கு, புதிதாக ஒரு நனிக் கால்வாய் வெட்டுதல்—இதற்கு மதிப்பிடப்பட்டுள்ள செலவு ரூ. 3,030.

கீழ் விராணம் தாங்கலுக்கு ஜலம் சப்ளை செய்யும் கால்வாயைப் புதுப்பித்தல்—இதற்கு மதிப்பிட்டுள்ள செலவு தொகை ரூ. 6,700.

தூசி ஏரியைச் சேர்ந்த காக்கா மடுகு ஜலப் போக்குக்கான கால்வாய் ஒன்று அமைத்தல்—இதற்கு மதிப்பிட்டுள்ள செலவு தொகை ரூ. 4,640.

இதுவரையில் 123 கால்வாய்களில் தூர் எடுக்கப்பட்டுள்ளது.

## காணவேண்டிய இடங்கள்.

வேலூர் கோட்டை, கோயில்.

நவ்–லக்–பாக், ராணிப்பேட்டை.

சோளிங்கபுரம்–மலைக்கோயில்.

திருவண்ணமலை.

விரிஞ்சிபுரம் கோயில்.

*1950–51*-ம் ஆண்டு முடிய வட ஆற்காடு ஜில்லாவில் மேட்டூர் மின்சாரத் திட்டத்தின்மூலம், சர்க்கார் மின்சார இலாகா நேரடியாக மின்சாரம் வழங்கும் கிராமங்கள் :

அரக்கோணம் தாலூகா.

மின்சார வசதி பெறும் கிராமங்கள்; ஆட்டுப்பாக்கம், அரக்கோணம், அரிகிலவாடி, அசன்லிக்குப்பம், நெமிலி, புளியமங்கலம், பரமேஸ்வரமங்கலம், சாயனவரம், தக்கோலம், பனப்பாக்கம், ஓச்சேரி, புதேரி, சாலை.

வேலூர் தாலூகா.

ஷேம்பாக்கம்.

போளூர் தாலூகா.

போளூர், குண்ணத்தூர், ரெண்டேரிப்பேட்டை, குருவிமலை, காப்பலூர், கலசப்பாக்கம், தென் பள்ளிப்பட்டி, மொத்துபாளையம், பில்லூர், பலாக்கோயில்.

வாலாஜா தாலூகா.

அல்லாலச்சேரி, அரும்பாக்கம், கலவை, காவேரிப்பாக்கம், கதப்பேரி, லோகபுரம், ஓழுகூர், சாத்தம்பாக்கம், சுமைதாங்கி, தலங்கை, வங்கூர், வள்ளுவம்பாக்கம், சோளிங்கூர், பெண்ணகரம், பாகவல்லி.

ஆரணி தாலூகா.

ஆரணி, களாம்பூர், சாத்த விஜயநகரம், கொண்டவேட்டித் தாங்கல், பளங்காளூர், மேலப்புதுப்பாக்கம், மாம்பாக்கம், வேலப்பந்தல், காட்டேரி, நடுக்குப்பம், மேலப்பளந்தை, மாமண்டூர்.

செய்யாறு தாலூகா.

திருவெட்டிபுரம், கொறக்கை, சொரையூர்.

வந்தவாசி தாலூகா.

வந்தவாசி.

திருவண்ணமலை தாலூகா.

அடையூர், தேவனேந்தல், நல்லவன்பாளையம், வெங்கிக்கால், அதியனேந்தல், ஆணை பிராண்டன், வேட்டவாளம்.

திருப்பத்தூர் தாலூகா.

ஆனந்தப்பட்டி, கிறிஸ்து குலாஷ்ரம், ஜோலார்ப்பேட்டை, நான்கு கிணறுகள் (விஸ்தரிப்பு), ஜோலார்ப்பேட்டை–வாணியம்பாடி லைன்ஸ், பாச்சல் மிட்டா, காசிநாயகம்பட்டி, அக்கிரஹாரம், ஏலகிரி, கொடியூர்.

### குடியாத்தம் தாலூகா.

பெரணம்பட்டு, கொமராபாத், நரியம்பேட்டை, அங்கநல்லூர், நத்தம், பீமாபுரம், தலையாத்தம், செருகங்கி, குடியாத்தம், தாமலச் செருவு, வடக்கத்திப்பட்டி, மேல் முட்டுக்கூர், சிங்கல்பாடி, பாலூர், கொத்தூர், கொண்டசமுத்திரம், பாக்கம், கள்ளூர், செடுகரை, ஆலத்தூர், மேலத்தூர், மதனூர், தட்டாலம், கல்லேரி, சாத்கூர், அரிந்தம்பேட்டை, மஞ்சம்பேட்டை.

### லைசென்ஸ் பெற்றவர்கள்மூலம் மின்சாரம் விநியோகிக்கப்படும் கிராமங்களும், பட்டணங்களும்.

லைசென்ஸ் பெற்றவர்—கர்னடிக்.

ஜில்லா—வட ஆற்காடு.

தாலூகா—திருப்பத்தூர்.

கிராமங்களும், பட்டணங்களும்—வாணியம்பாடி, புதூர், தேவஸ்தானம், பழைய வாணியம்பாடி, செட்டியப்பனூர்.

லைசென்ஸ் பெற்றவர்—கர்னடிக்.

ஜில்லா—வட ஆற்காடு.

தாலூகா—வேலூர்.

கிராமங்களும், பட்டணங்களும்—ஆம்பூர், ஆலங்குப்பம், சோளூர், சேளெகுப்பம், தரவல்லி, தேவலபுரம், துத்திப்பேட்டை, உப்பரபள்ளி, கந்தராம்பள்ளி, லப்பைமாங்குப்பம், சின்னவெங்கடசமுத்திரம், பெரியவெங்கடசமுத்திரம், கோவிந்தபுரம், மாரப்பேட்டை, செங்காளிகுப்பம், ஆளங்கிகுளம், வெங்கடசமுத்திரம், மாரப்பட்டு, அதகாரி.

லைசென்ஸ் பெற்றவர்—திருப்பத்தூர்.

ஜில்லா—வட ஆற்காடு.

தாலூகா—திருப்பத்தூர்.

கிராமங்களும், பட்டணங்களும்—திருப்பத்தூர்.

லைசென்ஸ் பெற்றவர்—திருவண்ணாமலை.

ஜில்லா—வட ஆற்காடு.

தாலூகா—திருவண்ணாமலை.

கிராமங்களும், பட்டணங்களும்—திருவண்ணாமலை.

லைசென்ஸ் பெற்றவர்—வேலூர்.

ஜில்லா—வட ஆற்காடு.

தாலூகா—வேலூர்.

கிராமங்களும், பட்டணங்களும்—வேலூர் டவுன், தொறைப்பாடி, அாத்துவாச்சேரி, முள்ளிபாளையம் கஸ்பா, ராமநாய்க்கன்பாளையம் சல்லவரம், வடவேளூர், சித்தேரி, ராயவேலூர்.

லைசென்ஸ் பெற்றவர்—வேலூர்.

ஜில்லா—வட ஆற்காடு.

தாலூகா—குடியாத்தம்.

கிராமங்களும், பட்டணங்களும்—காட்டுப்பாடி, காங்கேயநல்லூர், நரபாடவேடு, விருத்தம்பேட்டை, செங்குட்டை, கீழ்த்தாம்பட்டறை வண்ட்ரன்நாங்கல்.

லைசென்ஸ் பெற்றவர்—வேலூர்.

ஜில்லா—வட ஆற்காடு.

தாலூகா—வாலாஜா.

கிராமங்களும், பட்டணங்களும்—வாலாஜா, ராணிப்பேட்டை, ஆற்காடு, விஷாரம், வன்னிவேடு, மோட்டூர், மனத்தாங்கல், பிஞ்சி, கரை, நாவல்பூர், கும்மட்டம்.

மேட்டூர் மின்சாரத் திட்டத்தின்மூலம் மின்சாரம் வழங்கப்பெறும் மின்சார நிலையங்கள்.

## எக்ஸ்ட்ரா ஹைடென்ஷன் மின்சார டிரான்ஸ்பார்மர் நிலையங்கள்.

சிங்காரப்பேட்டை, திருப்பத்தூர், ஆம்பூர், வடக்கத்திப்பட்டி, வேலூர், திருவண்ணமலை, வெட்டவாளம்.

## ஹைடென்ஷன் மின்சார டிரான்ஸ்பார்மர் நிலையங்கள்.

ராணிப்பேட்டை, காவேரிப்பாக்கம், அரக்கோணம், கடம்பத்தூர்' போளூர், ஆரணி, குப்பம்.

# அபிவிருத்திப் பட்டியல்

விவசாயம்

| | | |
|---|---|---|
| இந்த ஜில்லாவின் தாலுகாக்கள் ... | 11 | |
| கிராமங்கள் ... ... ... | 2,100 | |
| இதன் மொத்த விஸ்தீர்ணம் ... ... | 4,648 | சதுர மைல், |
| இங்குள்ள நிலங்களின் மொத்த விஸ்தீர்ணம் ... ... ... ... | 2,974,637 | ஏக்கர். |
| காடுகளின் விஸ்தீர்ணம் ... ... | 768,182 | ,, |
| சாகுபடிக்கு லாயக்கான தரிசு நிலங்கள் ... ... ... ... | 3,49,217 | ,, |
| சாகுபடியாகும் நிலங்கள் ... ... | 1,076,006 | ,, |

ஆறுகள்—பாலாறு, செய்யாறு, பொன்னியாறு

| | | |
|---|---|---|
| ஏரிகளும், குளங்களும் ... ... | 2,709 | |
| கிணறுகள் ... ... ... | 150,000 | |

சென்ற நான்கு வருஷ காலத்தில் இந்த ஜில்லாவில் வினியோகித்த உரவகைகள்

| | | |
|---|---|---|
| பிண்ணாக்கு ... ... ... | 18,136 | டன். |
| ரசாயன உரம் ... ... ... | 7,045 | ,, |
| எலும்பு உரம் ... ... ... | 99 | ,, |

விவசாய யந்திரங்கள்

| | | |
|---|---|---|
| டிராக்டர்கள் ... ... ... | 5 | |
| புல்டோஸர்கள் ... ... ... | 3 | |
| ஆயில் என்ஜின்கள் ... ... | 16 | |
| பெட்ரோல் பம்பு செட்டுகள் ... | 36 | |
| மேற்கூறிய யந்திர சாதனங்களால் உழப்பட்ட நிலத்தின் விஸ்தீர்ணம் ... | 2,842 | ஏக்கர். |
| சமன் செய்து பண்படுத்தப்பட்ட நிலங்கள் ... ... ... ... | 240 | ,, |

இரும்பும் எஃகும்

வண்டி உருளைச் சட்டங்கள், வண்டிப்பார், தகடுகள், கம்பிகள் ஆக 139,828 உருப்படிகள் செய்ய 1,584 டன் இரும்பும், எஃகும் வினியோகிக்கப்பட்டன.

விவசாயக்கருவிகள் உற்பத்தித் தொழிற்சாலைகள்—9

விவசாயிகளுக்கு விதைகளும் எருவகைகளும் வாங்க ரூ, 3,57,325-ம், விவசாயக் கருவிகள் வாங்க ரூ. 1070-ம் தக்காவிக் கடனுக சர்க்கார் வழங்கியுள்ளார்கள்.

8,750 ஏக்கர் பரப்பு வாய்ந்த நிலங்கள் மண் அரிப்பினின்றும் பாதுகாக்கப்பட்டுள்ளன.

குழாய்க் கிணறுகள் 45 தோண்டப்பட்டன.

## நீர்ப்பாசனத் திட்டங்கள்

| திட்டங்கள். | செலவு ரூ. | நீர்ப்பாசனம் பெறும் நில விஸ்தீர்ணம். | |
|---|---|---|---|
| 1. கஞ்சி கொண்டம் (புதுப்பித்தல்) | 47,500 | 246 | ஏக்கர். |
| 2. கட்டகரம் பாளையம் அணைக் கட்டு (புதுப்பித்தல்) ... | 30,000 | 675 | ,, |
| 3. மஞ்சளாற்றைப் பழுது பார்த்தல் | 13,700 | 1137 | ,, |
| 4. செங்கல் நத்தம் ஏரி கரையை உயர்த்திக் கட்டுதல் ... ... | 5030 | 101 | ,, |
| 5. காவனூர் ஏரிக்குப் புதிய சப்ளை கால்வாய் வெட்ட ... ... | 7500 | 470 | ,, |
| 6. வம்பலூர் ஏரிக்குப் புதிய சப்ளை கால்வாய்வெட்ட ... ... | 9000 | 220 | ,, |
| 7. வனபாடி சித்தேரி புதுப்பிக்க | 2340 | 20 | ,, |
| 8. மருதாடு ஏரிக்குத் தண்ணீர் வசதி ஏற்படுத்த ... ... | 3030 | 743 | ,, |
| 9. கீழ் வீராணம் தாங்கலுக்கு சப்ளை கால்வாயைப் பழுது பார்க்க ... ... ... | 6700 | 90 | ,, |
| 10. தாமலுக்குக் குறுக்கே சைபன் அமைக்க ... ... ... | 2740 | 446 | ,, |
| 11. தூசி ஏரியின் காக்கா மடுக்கு நீர்ப்போக்கு வசதி ஏற்படுத்த | 4640 | 1000 | ,, |

## மின்சாரத் திட்டம்

மேட்டூர் திட்டத்தின் மூலம் தற்போது வடஆற்காடு ஜில்லாவில் கைத்தொழில், விவசாயம், வீட்டு உபயோகம் ஆகிய விஷயங்களுக்கு மின்சாரம் உபயோகிக்கப்படுகிறது. இப்போது உபயோகிக்கப்படும் மின்சார சக்தியின் அளவு 5,378,613 யூனிட்டுகள்.

குடியாத்தத்திலுள்ள மின்சார வினியோக ஸ்தாபனத்தை நமது சர்க்கார் 1950-ம் மார்ச்சு மீ 15உ ஏற்றுக்கொண்டு நடத்தி வருகின்றனர்.

இந்த ஜில்லாவில் 153 கிராமங்கள் மின்சார வசதி பெற்றுள்ளன.

## ரஸ்தாக்கள்

சர்க்காருக்குச் சொந்தமான ரோடுகள் நீளம் மைல் 659—6—120

ரோடு, பால பராமரிப்பு வேலைக்கு 1946-47-ல் ரூ. 6,16,028-ம்
,, 1947-48-ல் ரூ. 10,10,880-ம்
,, 1948-49-ல் ரூ. 13,73,508-ம்
,, 1949-50-ல் ரூ. 15,97,720-ம்
செலவாயின.

## கல்வி

236 ஆரம்பப் பாடசாலைகளில் கட்டாயக் கல்வி புகுத்தப்பட்டுள்ளது.

47 ஆரம்பப் பாடசாலைகள் அடிப்படைக் கல்விச் சாலைகளாக மாற்றப்பட்டுள்ளன.

முதியோருக்குக் கல்வி புகட்ட ஆசிரியருக்குப் பயிற்சி அளிக்கும் பயிற்சி சாலை செய்யாற்றில் 1948-ம் வருஷத்தில் ஆரம்பித்து வைக்கப்பட்டது. 29 முதியோர் பாடசாலைகள் திறக்கப்பட்டுள்ளன.

இந்த ஜில்லாவிலுள்ள எல்லா ஆரம்பப் பாடசாலைகளிலும் சினிமாப்படங்கள் மூலமும், வானொலி மூலமும் கல்வி சம்பந்தமான விஷயங்களைச் சிறுவர்களுக்குப் புகட்டும் முறை கையாளப்பட்டு வருகிறது.

## சுகாதாரம்

ஸ்தலஸ்தாபன ஆதீனத்தின் கீழ் 15 பிரசவ, சிசு சம்ரக்ஷணை நிலையங்கள் நிறுவப்பட்டுள்ளன. இவை ஒரு முதல் கிரேட் வைத்திய ஆபீசரின் (லேடி டாக்டர்) மேற்பார்வையில் இருந்து வருகின்றன.

6 ஆரம்ப சுகாதார நிலையங்கள் 99,859 ஜனத்தொகை கொண்ட 86 கிராமங்களின் சுகாதார சம்பந்தமான விஷயங்களைக் கவனித்து வருகின்றன.

குடியாத்தத்திலுள்ள சர்க்கார் ஆஸ்பத்திரியில் பிரசவ விடுதி கட்டுவதற்காக ஸ்ரீ பி. கே. கங்காதர முதலியார் வழங்கிய தொகை ரூ. 10,000த்தைச் சர்க்கார் ஏற்றுக்கொண்டனர்.

வந்தவாசி, வாலாஜா, திருவண்ணாமலையிலுள்ள சர்க்கார் ஆஸ்பத்திரிகளுக்கு மின்சார வசதியளிக்க சர்க்கார் ரூ. 8150-ஐ அனுமதித்துள்ளார்கள்.

வேலூரிலுள்ள சர்க்கார் பெண்ட்லண்டு ஆஸ்பத்திரியில் தற்காலிகமாக 50 படுக்கைகள் கொண்ட இரண்டு விடுதிகள் அமைக்க சர்க்கார் ரூ. 7400-ஐ அனுமதித்துள்ளார்கள்.

## கூட்டுறவு

இந்த ஜில்லாவில் தற்போது 14 வித கூட்டுறவு சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

1. கடன் வழங்கும் கிராமச் சங்கங்கள் 847.
2. கட்டுப்பாடுள்ள பங்கீட்டுப் பொருள்களை விநியோகிக்கும் சங்கங்கள் 23,
3. கூட்டுறவு விற்பனை சங்கங்கள் 7.
4. பால் சப்ளை சங்கங்கள் 44.
5. உணவுத் தானிய விநியோகக் கூட்டுறவு சங்கங்கள் 191.
6. மொத்த விற்பனை கூட்டுறவு சங்கம், வேலூர் 1.
7. வீடு கட்டித்தரும் கூட்டுறவு சங்கம்.
8. நெசவாளர் கூட்டுறவு சங்கங்கள் 3.
9. மோட்டார் போக்குவரத்து கூட்டுறவு சங்கம்.
10. மரவேலை, உலோகவேலை சம்பந்தமான கூட்டுறவு சங்கம்.

11. குடிசைத் தொழில் கூட்டுறவு சங்கங்கள் 16.

12. பயிரிடும் நிலங்களை இணைக்கும் கூட்டுறவு சங்கங்கள் 4.

13. மாணவர் கூட்டுறவு சங்கங்கள் 26.

14. நிலக்குடியேற்ற கூட்டுறவு சங்கங்கள் (ஹரிஜனங்களுக்கும் பின்தங்கிய வகுப்பினருக்கும்) 2.

## தொழில் அபிவிருத்தி

சர்க்கார் உதவிபெறும் தொழிற் சாலைகள்.

1. சுதர்ஸன் ஆயில் மில்ஸ், காட்டுப்பாடி—வனஸ்பதி உற்பத்தி.

2. ஸ்ரீவிஜயலக்ஷ்மி டெக்ஸ்டைல்ஸ், குடியாத்தம்—பட்டு ஜவுளி மில்,

3. ராஜேஸ்வரி மில்ஸ், குடியாத்தம், பருத்தி, பட்டு ஜவுளி மில்.

4. தி மெட்ராஸ் வெஜிடபிள் ஆயில்ஸ், ராணிப்பேட்டை—எண்ணெய் வகைகளைச் சுத்தி செய்தல்.

கம்பளி, ஜமக்காளம் முதலியன உற்பத்தி செய்வதற்கு வாலாஜா பேட்டையில் தொழிற்சாலை யொன்றுண்டு.

குடிசைக் கைத்தொழில்களுக்காக இந்த ஜில்லாவில் 1949ஹு செப்டெம்பர்மீ 1உவிருந்து 1950-ம்ஹு டிசம்பர்மீ 31உ வரையில் 198 டன் இரும்பும், எஃகும் வினியோகிக்கப்பட்டுள்ளன.

## கிராமமுன்னேற்றம்

இந்த ஜில்லாவில் கிராம நல அபிவிருத்திக்காகத் தேர்ந்தெடுக்கப் பட்ட பிர்க்காக்கள்—கலசபாக்கம், கடலாடி, துரிஞ்சாபுரம். இந்தப் பிர்க்காக்களைச் சேர்ந்த கிராமங்களில்

| | | |
|---|---|---|
| வெட்டியுள்ள எருக்குழிகள் ... ... ... | 1537 | |
| கிராம சேவக் சங்கங்கள் ... ... ... | 55 | |
| சாகுபடி செய்யப்பட்ட தரிசு நிலங்கள் ... ... | 95·31 | ஏக்கர். |
| கட்டிமுடித்த பாடசாலைக் கட்டிடங்கள் ... | 10 | |
| வாசக சாலைகள் ... ... ... ... ... | 15 | |
| நூல் நிலையங்கள் ... ... ... ... | 28 | |
| ரேடியோ செட்டுகள் ... ... ... ... | 10 | |
| புதிதாக நட்ட மரங்கள் ... ... ... | 9247 | |
| மக்களுக்கு வழங்கிய சர்க்காக்கள் ... ... | 258 | |

கிராம பிரதேசங்களுக்கு ஜலசப்ளைக்காக ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 87.000.

போக்குவரத்துக்கான விஷயங்களுக்கு ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 83,000.

## ஹரிஜன முன்னேற்றம்

ஹரிஜனங்களின் வீட்டு வசதிக்காக தேர்ந்தெடுக்கப்பட்ட சேரிகளின் எண்ணிக்கை 50.

வீடுகள் கட்ட ஒதுக்கப்பட்ட நிலத்துண்டுகள் 54.

4 சேரிகளில் ரஸ்தாக்கள் அமைக்கவும், சுடுகாடுகள் ஏற்படுத்தவும் வழிகோலப்பட்டுள்ளது,

ஹரிஜன சிறுவர்களுக்கு ஏற்படுத்திய பாடசாலைகள் 161.

அவற்றில் வாசிக்கும் மாணவர்களின் எண்ணிக்கை 10,576,

அவர்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுப்பதற்கு அனுமதித்த தொகை ரூ. 13,867-12-0.

ஹரிஜன ஹாஸ்டல்கள் 7.

இந்த ஹாஸ்டல்களின் பராமரிப்புக்காக ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 25650.

புது கிணறுகள் வெட்டவும், பழைய கிணறுகளைப் புதுப்பிக்கவும் ஒதுக்கப்பட்டதொகை ரூ. 20,255.

## மற்ற பொது நலப்பணிகள்

### மதுவிலக்குச் சட்ட அமல்

மாஜி குடியர்கள் குடிப்பழக்கத்தை மறப்பதற்கு அனுகூலமாக, 55 பிர்க்கா பந்தய விளையாட்டுகளும், 11 தாலுகா பந்தய விளையாட்டுகளும், ஒரு ஜில்லா பந்தய விளையாட்டும் நடத்தப்பட்டன.

கதா காலட்சேபங்களும் பஜனைகளும் தெருக்கூத்துகளும்சர்க்கார் செலவில் வெகுவிமரிசையாய் நடந்தேறி வருகின்றன.

மாஜி-கள்ளிறக்குவோருக்கு வேலையளிப்பதற்காக,

1947-48ல் நிறுவப்பட்ட வெல்ல உற்பத்திக் கூட்டுறவு சங்கங்கள் 28.

1948-49ல் நிறுவப்பட்ட வெல்ல உற்பத்திக் கூட்டுறவு சங்கங்கள் 41.

1949-50-ம்ல் நிறுவப்பட்ட வெல்ல உற்பத்திக் கூட்டுறவு சங்கங்கள் 65.

150 மாஜி கள்ளிறக்குவோருக்கு வேலையளிக்க ஆம்பூரைச் சூழ்ந்துள்ள 6 கிராமங்களிலும் வேலூரிலும், குடியாத்தத்திலும் பால் சப்ளை கூட்டுறவு சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

## மாதர் நல இலாகா

இந்த ஜில்லாவில் அரக்கோணம், ஒடுகாத்தூர், மேலாரணி, கலசபாக்கம், வேலூர் ஆகிய இடங்களில் இந்த இலாகாவின் கிளை காரியாலயங்கள் சிறந்த சேவை செய்துவருகின்றன. இச் சேவையின் பயனாக இங்குள்ள மாதர் அநேகர் கல்வியறிவு பெற்று முன்னேற்ற மடைந்துள்ளார்கள்.

## சமூக ரேடியோ செட்டுகள்

21 பஞ்சாயத்து போர்டுகளிலும், 5 தனிப்பட்ட ஸ்தாபனங்களிலும், 4 சர்க்கார் ஸ்தாபனங்களிலும், ஜில்லா முனிசிபாலிட்டிகளிலும் 37 ரேடியோ செட்டுகள் அமைக்கப்பட்டுள்ளன.

இந்த 37 ரேடியோ செட்டுகள் சரிவரப் பணியாற்றுவதைக் கண்காணிப்பதற்காக திருவண்ணுமலையில் ஒரு ரேடியோ சேவை நிலையம் நிறுவப்பட்டுள்ளது.

MADRAS : PRINTED BY THE SUPERINTENDENT, GOVERNMENT PRESS.

"செல்வம் எத்தனையுண்டு புவிமீதே
அவை யாவும் படைத்த தமிழ்நாடு"

"வாழிய செந்தமிழ் வாழ்க நற்றமிழர்
வாழிய பாரத மணித்திருநாடு."